Regd. No M. 5934 Phone: 2241

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)

மலர் 15 இதழ் 68 ] சென்னை 24-10-58 விளம்பி௵ ஐப்பசி௴ 8௳ வெள்ளிக்கிழமை [ 4 பக்கங்கள் 7 காசுகள்

## ரஷ்யா, கி. ஜெர்மனி, போலந்துக்கு இந்திய வர்த்தகத் தூதுக் குழு

புதுடில்லி, அக். 23—

சோவியத் யூனியனுக்கும், இந்தியாவுக்கும் இடையே வர்த்தகம் மேலும் பெருகுவதற்கு ஒரு ஒப்பந்தம் செய்துகொள்வதற்காக திரு. கே. பி. லால் தலைமையில் இந்திய அரசாங்கத் தூதுக் குழு ஒன்று இன்று புதுடில்லியை விட்டு மாஸ்கோவுக்குப் புறப்பட்டது.

இந்தத் தூதுக் குழுவினர், கிழக்கு ஜெர்மனிக்கும், போலந்துக்கும் கூட விஜயம் செய்வர். நிலக்கரி உற்பத்தி அபிவிருத்திக்கு வேண்டிய சாதனங்களையும், இந்திய ரயில்வேக்களுக்குத் தேவையான எஃகு பெறுவதற்கும் இந்தத் தூதுக் குழுவினர் முயற்சி செய்வர்.



# பகிரங்க நீதிமன்ற விசாரணை நடக்கும்

ஜெயப்பிரகாசர் சர்க்கஸ்!

## மூணாறு துப்பாக்கிப் பிரயோகம் பற்றி கேரள சட்ட மந்திரி அறிவிப்பு

### நிலைமை ஆபத்து என்றாலொழிய துப்பாக்கிப் பிரயோகம் கூடாது

### செய்திகள் மிகைப்படுத்தப்பட்டது குறித்து வருத்தம்

திருவனந்தபுரம், அக். 22—

கேரளத்தில் ஹைரேஞ்ச் தோட்டக்காடுகளில் சமீபத்தில் நடைபெற்ற மூன்று துப்பாக்கிப் பிரயோகங்கள் பற்றி பகிரங்க நீதிமன்ற விசாரணை நடத்த சீக்கிரமே உத்திரவிடப்படுமென்று கேரள சட்ட மந்திரி கிருஷ்ணய்யர் கூறினார்.

ஒரு துப்பாக்கிப் பிரயோகம் சென்ற புதன் கிழமை நெட்டிக்குடியிலும் மற்றும் இரண்டு துப்பாக்கிப் பிரயோகங்கள் சென்ற திங்களன்று குதிராலி, தலையாறு ஆகிய இடங்களிலும் நடைபெற்றன.

துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெற்ற இடங்களுக்கு விஜயம் செய்துவிட்டு சட்ட மந்திரி இன்றுதான் இங்கு வந்து சேர்ந்தார். அதிகப் பட்ச பலாத்காரம் உபயோகிக்கும் அளவுக்கு மிகவும் ஆபத்தான நிலைமை ஏற்பட்டாலொழிய துப்பாக்கிப் பிரயோகம் செய்யவேண்டாம் என்று போலீசுக்குத் தெளிவான உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருந்தது என்று அவர் பி. டி. ஐ. நிருபரிடம் கூறினார்.

தோட்டக்காடு மானேஜர்களின் உயிர், உடைமைகளைப் பாதுகாக்கவும், பலாத்காரமான மறியல் நடப்பதைத் தடுக்கவும் எல்லா நியாயமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன என்று அவர் தெரிவித்தார்.

மூன்று துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெற்று இருவர் இறக்க நேரிட்டதற்கு அமைச்சர் மிகுந்த வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டார். ஆனால் சில பத்திரிகைகள் இறந்தோர் தொகை உட்பட பல செய்திகளை ரொம்பவும் மிகைப்படுத்தி பிரசுரித்திருப்பது மிகவும் வருந்தத்தக்கது. துப்பாக்கிப் பிரயோகத்தில் 2 பேர்கள் தான் இறந்தனர் என்றார் வி ஆர். கிருஷ்ணய்யர்.

பல தோட்டக்காடுகளுக்குத் தாம்சென்று வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளவர்களோடு பேசியதாகவும் இப்போது ஹைரேஞ்ச் பகுதியில் முன்னைவிட அமைதி நிலவுவதாகவும் தெரிவித்தார்.

தொழிலாளர்கள் மட்டுமன்றி தோட்டக்காடுகளின் மானேஜர்களையும் தாம் சந்தித்து சட்டம் ஒழுங்கு பற்றி விவாதித்ததாகவும், ராஜ்யம் பூராவிலும் விரைவில் தோட்டத் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்ய இருப்பதால் இந்நிலைமையை சமாளிக்க விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன என்றும் அவர் கூறினார். (பி. டி. ஐ.)

## அல்ஜீரிய சுதந்திர சர்க்கார் அறிவிப்பு

நியூயார்க், அக். 22—

அல்ஜீரிய சுதந்திர அரசாங்கத்தின் செய்தித்துறை அமைச்சர் எம். மொகம்மதுயாசிட் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்துக்கெதிராக 'தொண்டர்கள்' திரட்ட தனது அரசாங்கம் முடிவு செய்திருப்பதாக அறிவித்தார்.

"ஆயுதந்தாங்கிய தொண்டர்களுக்குஅழைப்பு விடுப்பதற்கான நாள் விரைவில் வரும்; அரபு உலகத்திலிருந்துமட்டுமின்றி உலகின் எல்லாப் பகுதிகளிலுள்ளவர்களுக்கும் அழைப்பு விடுக்கப்படலாம்" என்று சுதந்திர அரசாங்கத்தின் குறிப்பொன்று கூறுகிறது.

## வேலை நிறுத்தத்தை உடைப்பது போலீஸ் வேலையல்ல

### மக்களை இம்சிக்க போலீசை அனுமதியோம்

### ரோசம்மாவுக்கு கேரள சட்ட மந்திரி கடிதம்

திருவனந்தபுரம், அக். 22—

"கேரள ஹைரேஞ்ச் தோட்டக் காடுகளில் போலீசார் முறை தவறியும் வரம்பு மீறியும் நடந்து கொண்டார்கள் என்று எனக்குப் பல புகார்கள் வந்துள்ளன. இவற்றைப் பற்றி பூரணமாக விசாரணை நடத்தப்படும் என்பதை உறுதிகூற விரும்புகிறேன். அதோடு போலீசார் தொழிலாளர்களை அடிக்கவோ இம்சைப்படுத்தவோ கூடாது என்று உடனடி உத்திரவு அவர்களுக்குப் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்."

இவ்விதம் கேரள சட்ட அமைச்சர் வி. ஆர். கிருஷ்ணய்யர் நேற்று ஏ. ஐ. டி. யு. சி. தோட்டத் தொழிலாளர்கள் சங்கப் பொதுச்செயலாளரான ரோசம்மா புன்னூஸ் எம். எல். ஏ. க்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

தொழிலாளர்கள் பரஸ்பரம் மோதலை தவிர்க்க வேண்டுமென்றும் வதந்திகளைப் பரப்பவோ அல்லது நம்பவோ கூடாது என்றும் அவர் கேட்டுக் கொண்டுள்ளார். சம்பந்தப்பட்ட எல்லோருடைய உயிருக்கும் உடைமைக்கும் போலீஸ் பாதுகாப்புக் கொடுக்கும் என்றாலும், அதற்காக வேலை நிறுத்தத்தை உடைக்கவோ, மக்களை இம்சிக்கவோ செய்யாது என்று அவர் தமது கடிதத்தில் மேலும் அறிவித்துள்ளார்.

மூணாறு பகுதியில் சட்ட ஒழுங்கை நிலைநாட்டுவதில் மிகவும் ஜாக்கிரதையாகவும் நிதானமாகவும் நடந்துக்கொள்ளும்படி போலீசுக்குக் கண்டிப்பான உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறதென்றும் இனி இத்தகைய துரதிர்ஷ்டமான சம்பவங்கள் நடைபெறாது என்று நம்புவதாகவும் கிருஷ்ணய்யர் தமது கடிதத்தில் எழுதியுள்ளார். (பி. டி. ஐ.)

## தொழிற்சங்கத் தலைவர்கள்-மந்திரி ஆலோசனை

கோட்டயம், அக். 22—

தொழில் மந்திரி டி. வி. தாமஸ் தொழிற்சங்கத் தலைவர்களைச் சந்தித்தார். இரவு நெடுநேரம் வரையில் ஆலோசனை நடந்தது. ஏ. ஐ டி. யு. சி. தலைவர்கள் வேலை நிறுத்தத்தை நீடிக்க முடிவு செய்துள்ளனரென்றும் ஐ. என். டி யு. சி. வேலைநிறுத்தம் வேண்டாமென்று முடிவு செய்ததாகவும் தெரிகிறது.

## "வெள்ளை முதலாளியும், ஜி. ராமானுஜமுமே துப்பாக்கிப் பிரயோகத்திற்குப் பொறுப்பு"

### பி. பாலச்சந்திர மேனன் அறிக்கை

திருவனந்தபுரம், அக். 22—

தேவிகுளம் தோட்டத்தொழிலாளர்மீது நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்திற்கு முழுப் பொறுப்பும் கண்ணன் தேவன் கம்பெனி முதலாளிகளையும், ஐ. என். டி. யு. சி. தலைவர் ஜி. ராமானுஜத்தையும்தான் சாரும் என்று கேரள தொழிற்சங்க காங்கிரஸ் (ஏ ஐ டி.யு.சி.) பொதுக் காரியதரிசி பி. பாலச்சந்திர மேனன் ஓர் அறிக்கையில் சுட்டிக்காட்டி குற்றம் சாட்டியுள்ளார்.

#### தப்ப முடியாது

"நான் கூறும் இந்தக் குற்றச்சாட்டிலிருந்து அதாவது துப்பாக்கிப் பிரயோகத்திற்கு பொறுப்பிலிருந்து கண்ணன் தேவன் கம்பெனியின் நிர்வாகிகளோ அல்லது ஜி. ராமானுஜமோ தப்பி

(4-ம் பக்கம் பார்க்க)

# ஜனசக்தி

சென்னை 24-10-1958


## துரதிர்ஷ்டமான துப்பாக்கிப் பிரயோகம்

இம்மாதம் 20ம் தேதி, தேவி குளத்தில், பிரம்மாண்டமான பிரிட்டிஷ் கம்பெனியான கண்ணன் தேவன் கம்பெனிக்குச் சொந்தமான குட்ராலி, தலையார் ஆகிய தேயிலைத் தோட்டங்களில் தொழிலாளர் மீது துப்பாக்கிப் பிரயோகம் நடந்திருக்கிறது. இதனால் இருவர் இறந்துள்ளார்கள்; சிலர் காயமடைந்திருக்கிறார்கள்.

ஏ.ஐ.டி.யு.சி. தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் "முழுக்க முழுக்க நியாயமானது" என்றும், "சிற்சில அசம்பாவிதங்களைத் தவிர" வேலைநிறுத்தத்தை ஒட்டு மொத்தமாகப் பார்த்தால், தொழிலாளர்கள் "மிக அமைதியாகவும் சமாதானமாகவும் நடந்து கொண்டிருக்கிறார்கள்" என்றும் கேரள தொழில் மந்திரி டி. வி. தாமஸ் பத்திரிகைச் செய்தி நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியிருக்கிறார்,

எனவே போலீஸ் துப்பாக்கிப்பிரயோகம் தவிர்த்திருக்க முடியுமா? கண்ணீர்ப் புகையோடும் லேசான தடியடிப் பிரயோகத்தோடும் நிலைமையைச் சமாளித்திருக்க முடியுமா? சூழ்நிலை இந்த நிகழ்ச்சிக்கு அனுமதியளித்ததா? என்பன போன்ற விஷயங்களை நன்ருக அலசி சரி-தப்புக் கண்டாக வேண்டும். எனவே, காலந்தாழ்த்தாது இந்தத் துப்பாக்கிப் பிரயோகத்தைப் பற்றி கேரள சர்க்கார் பகிரங்க விசாரணை நடத்தியாக வேண்டும். தொழில் மந்திரி தமது மேற்படி பேட்டியில், 'பகிரங்க விசாரணை நடத்த வேண்டியது அவசியம் என்று உணர்கிறேன்' என்று கூறியிருப்பது நீதியுணர்ச்சியுள்ள எல்லோராலும் வரவேற்கத்தக்கது. நிற்க.

தேயிலைத் தோட்டத்தொழிலாளர்கள் தங்களுடைய "நியாயமான" போனஸ் கோரிக்கையை அடிப்படையாகக் கொண்டுதான் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். போனஸ் பிரச்னை அவர்களுக்கு திடீர்ப் பிரச்னை அல்ல. சில ஆண்டுகளாக இதுதான் பிரதான பெரிய பிரச்னை. ஏனென்றால் மலைத் தோட்டங்களில் வெள்ளை முதலாளிகள் அள்ளு கொள்ளை நடத்துகிறார்கள். ஆண்டுதோறும் லட்சம் லட்சமாகக் கொழுப்பு ஏறுகிறது. அதே பொழுதில், ஏழை பாழைகளான தொழிலாளர்கள், படுமோசமான வறுமை வாழ்வில் முங்கி மூழ்கிப் புழுப்போல் துடிக்கிறார்கள்.

நிர்வாகத்திற்கும் கருங்காலித்தனம் பண்ணுகிற "விசுவாசத்" தொழிலாளர்களுக்கும் — அவர்களுடைய உயிருக்கும் உடைமைக்கும் சர்க்கார் இதுவரை கண்டிராதபடி, சிறந்த, முதல்தரமான பாதுகாப்பு அளித்து வருகிறது. ஐ. என். டி. யு. சி. தலைமையும் காங்கிரஸ் தலைமையும், கருங்காலிகளை ஊக்குவித்து, வேலைக்கு ஏவி, வெள்ளை நிர்வாகத்தின் கொழுப்புக் குடலைச் சுற்றத் துணை புரிந்து, "பாதுகாப்புடன்" கம்யூனிஸ்டு-எதிர்ப்பு என்ற வேஷத்தில் தொழிலாளர்களுக்குப் பகிரங்கமாகத் துரோகம்செய்யும் திருப்பணியில் இறங்கியிருக்கிறார்கள்.

இவ்வளவுக்கும் பிறகு, நிர்வாகம் மொத்தம் 35,000 தொழிலாளர்களில் 8000 பேர் வேலை செய்கிறார்கள் என்று கூறுகிறது. ஐ. என். டி. யு. சி. தலைமை பெரும்பாலான தொழிலாளர்கள் தங்கள் தலைமையையே பின்பற்றுகிறார்கள் என்கிறது. ஆனால், உண்மையில் இந்த இரண்டு கூற்றுக்களும் பச்சைப் பொய். 90 சதமானம் தொழிலாளர்கள் வேலைக்குப் போகவில்லை.

இதன் பொருள் என்ன? ஐ. என். டி. யு.சி. தலைமையும் நிர்வாகமும் ஒப்புக் கொண்டுள்ள, போனஸ் விஷயத்தை 'மத்தியஸ்தத்திற்கு விடுதல்' என்பதை மிகப் பெருவாரியான தொழிலாளர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. மத்தியஸ்தம் (Adjudication) என்றால் என்ன என்று தொழிலாளர்களுக்கு சொந்த அனுபவத்திலிருந்து நன்ருகத் தெரியும். இதைப் பற்றி அகில இந்தியத் தொழிற்சங்கத் தலைவர்களில் ஒருவரான ராமமூர்த்தி நேற்று வெளியிட்டுள்ள அறிக்கையிலிருந்து வாசகர்கள் நன்ருகத் தெரிந்திருப்பார்கள்.

அனுமார் வால் மாதிரி 'அட்ஜூடிகேஷன்" (மத்தியஸ்தம்) நீண்டு, பிராணனை வாங்குவது தான் தொழிலாளர்கள் கைகண்ட அனுபவம். எனவே மிகப் பெருவாரியான தொழிலாளர்களைப் பிரதிநிதிப்படுத்தும் ஏ. ஐ. டி. யு. சி. சங்கம் "அட்ஜூடிகேஷனை" ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டது. சர்க்காரின் சமரஸத்திற்கு, வெள்ளை நிர்வாகம் ஆரம்பத்திலிருந்தே பிடிவாதமாக மறுத்து, சுமுக சூழ்நிலையைக் கெடுத்து வருகிறது.

ஆகவே, வேலை நிறுத்தத்தால், தொழில் தேக்கம் ஏற்படுவதற்கு முழுப் பொறுப்பாளி, வரட்டுப் பிடிவாதம் காட்டும் வெள்ளை நிர்வாகம் தான்.

'சுதேசமித்திரன்', 'நவ இந்தியா' போன்ற காங்கிரஸ் முதலாளி ஏடுகள், இந்த வேலை நிறுத்தத்தால், தேயிலை உற்பத்தித் தொழில் தேக்கம் அடைகிற தென்றும், அதனல், அந்நியச் செலாவணி நஷ்டம் ஏற்படுகிற தென்றும், ஏனவே, வேலை நிறுத்தம் தேசத் துரோகம் என்றும் 'தேச பக்த' நீலிக் கண்ணீர் வடிக்கின்றன.

அன்று வெள்ளை நிர்வாகம் 4 சதமானம் என்று குறைந்த போனஸை தான்தோன்றித்தனமாகக் கொடுத்தபோது, கம்யூனிஸ்டுகள் தொழிலாளர்களைக் காட்டிக் கொடுத்து விட்டார்கள் என்றார்கள். இன்று $12\frac{1}{2}$ சதமானம் போனஸ் வேண்டுமென்று தொழிலாளர்கள் சட்டபூர்வமாகப் போராடுகிற பொழுது கம்யூனிஸ்டுகள் கட்சி நலனை முதன்மைப்படுத்தி தேச நலனைக் காட்டிக் கொடுக்கிறார்கள் என்கிறார்கள்.

ஆகவே, கம்யூனிஸ்டுகளைப் பொறுத்தவரையில், "ஏறினாலும் குற்றம், இறங்கினாலும் குற்றம்" என்று காங்கிரஸ் தலைவர்களும், காங்கிரஸ் ஏடுகளும் ஓலமிடுகிறார்கள்.

கொள்ளை லாபம் அடிக்கிற வெள்ளை நிர்வாகத்தை $12\frac{1}{2}$ சதமான போனஸ் கொடுக்கும்படி, கம்யூனிஸ்டுகளோடு காங்கிரஸ்காரர்கள் இணைந்து நின்று கேட்கிறார்களா? இல்லை. மாருக கம்யூனிஸ்டு-எதிர்ப்பு வெறியால் வெள்ளை நிர்வாகத்தோடு "அட்ஜூடிகேஷனுக்கு" உடன்பட்டு, பல ஆண்டுகள் போனஸ் கிடைக்காமல் செய்து, தொழிலாளர்களுக்குத் துரோகம் செய்யத் துணிகிறார்கள்.

உடனடியாக 20 ரூபாய் தீபாவளி போனஸ் கொடுக்கும்படியும், பின்னர் முக்கூட்டு மாநாட்டில் எவ்வளவு போனஸ் என்று தீர்மானித்துக்கொள்ளலாமென்றும், தொழிலாளி தரவேண்டியதிருந்தால், அவனுடைய சம்பளத்தில் அதைப் பிடித்துக் கொள்ளலாமென்றும், இதை ஒப்புக்கொண்டால், நிர்வாகத்திற்கோ, ஏ. ஐ. டி. யு. சி.க்கோ ஐ.என்.டி.யு.சி.க்கோ யாருக்கும் நஷ்டமில்லை என்றும், உடனேயே சமரஸம் ஏற்பட்டால், நாட்டுக்கும், எல்லோருக்கும் நலம் என்றும் தொழில் மந்திரி கூறியதை நிர்வாகம் ஏன் ஏற்றுக் கொள்ளவில்லை? காங்கிரஸ்காரர்கள் ஏன் ஏற்றுக்கொண்டு, நிர்வாகத்தை அங்கீகரிக்கச்செய்து, 'தேச நலனுக்காக, அமைதியை நிலைநாட்ட முன்வரவில்லை. 'சுதேச மித்திரன்', 'நவ இந்தியா'க்களுக்கு, இதுபற்றி வாய்ஏன் அடைப்பட்டுப் போய்விட்டது?

வேலைநிறுத்தத்தை நீடிக்கவிட்டு பெரிய நஷ்டத்தை ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கும் நிர்வாகம், தற்காலிகமாக 20 ரூபாய் போனஸ் கொடுக்கப் பணமில்லை என்று பொய்சொல்லிப் பிடிவாதம் காட்டுகிறது எதனல்?

வெள்ளை நிர்வாகத்தின் திமிர் தண்டத்தைநெடுகலும்பாலூட்டி வளர்த்தவர்கள் காங்கிரஸ் தலைவர்களும் ஐ. என். டி. யு. சி. தலைவர்களுமே. வெள்ளை நிர்வாகத்திற்கு அதிகாரிகளிடத்திலும், போலீஸ்காரர்களிடத்திலும் கம்யூனிஸ்டு ஆட்சி ஏற்படும்வரையில் இருந்துவந்த செல்வாக்கு பகிரங்க ரகசியம்.

கம்யூனிஸ்டு ஆட்சியில், கேரளத்தில் சட்டமும் ஒழுங்கும் இல்லை என்று முதன் முதலில் ஓலமிட்டது கண்ணன் தேவன் வெள்ளை நிர்வாகம். அதைப் பற்றித்தான் தேபர் குழு ஓலமிடத் தொடங்கினர் என்பது நினைவு கூறத்தக்கது. ஆகவே, மேற்கூறிய துப்பாக்கிப் பிரயோகத்திற்கும், வேலைநிறுத்த நீடிப்புக்கும், குழப்ப நிலைகளுக்கும், இந்த கண்ணன் தேவன் வெள்ளை நிர்வாகம்—காங்கிரஸ் தலைமை—ஐ. என். டி. யு. சி. உறவுக்கும் பெருந் தொடர்பு உண்டு என்பதை தமிழ்ப் பெருமக்கள் உணர்ந்து பார்க்க வேண்டும்.

குழப்ப நிலைக்கு அடி வேர் வெள்ளை நிர்வாகத்தின் கொடுங்கரங்கள் என்பதை உணர்கிறவர்கள், வேலைநிறுத்தத்திற்கு எதிரிடையாக எழுங் குரல் ஒவ்வொன்றும், வெள்ளை நிர்வாகத்தைக் கொழுக்கவைக்கும் குரல் என்ற உண்மையைப் புரிந்துகொள்வது கடினமல்ல.

கேரள சர்க்கார், துப்பாக்கிப் பிரயோகத்தைப்பற்றி விசாரணை நடத்தவேண்டும். அதற்கு உண்மையான காரண பூதர்களைக் கண்டுபிடிக்க வேண்டும். தொழிலாளர்கள் 'வெற்றி நமதே' என்ற முழு நம்பிக்கையோடு, வேலைநிறுத்தத்தை உறுதியான சமாதான உணர்ச்சியோடு நடத்த வேண்டும்.

தமிழ்ப் பெருமக்கள் நியாயமான வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள பத்தாயிரக்கணக்கான தொழிலாளர்கள் வெற்றிபெற ஆதரவு முழக்கம் செய்வார்கள் என்பதில் ஐயமில்லை.

## பாரத இலக்கியத்தின் பழம் பெருமை

தொன்மையான வேத காலத் தொட்டு தத்துவம், சமயம், சாத்திரங்கள் எனப் பல துறைகளிலும் கீழ்த்திசை நாடுகளின் சிறப்புடன் விளங்கிய நூல்களின் ஏட்டுப் பிரதிகள், சோவியத் விஞ்ஞானப் பேரவையால் கண்ணும் கருத்துமாகச் சேகரிக்கப்பட்டு வந்துள்ளது.

தமிழகத்தைப் பொறுத்தவரையில் மாணிக்கவாசகரின் திருவாசகத் திரட்டின் ஏட்டுப் பிரதி இந்தப் பேரவையில் காட்சியளிக்கிறது. சைவ சமய குரவர்களில் தன்னிகரிலாது விளங்கிய மாணிக்கவாசகரின் இந்த சைவப் பாடல்கள் கலைச் சிறப்பு மிக்கவை. பௌத்த, ஜைன சமயவாதிகளுடன் போரிட்ட மாணிக்கவாசகர் 8, 9-ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர்.

பிற்கால புலவர் அருணகிரி நாதர் இயற்றியுள்ள கந்தரநுபூதி, சமஸ்கிருதத்திலுள்ள ஸ்கந்த தரனுபூதியின் தமிழ் வடிவம். இந்த நூலின் எழுத்துப் பிரதிகளும் பேரவையில் உள்ளன. அருணகிரிநாதர் [illegible] குலத்தோன்றல் என்று தெரிகிறது.

கதைகளின் மூலம் சிறந்த நீதிகளைப் போதிக்கும் இதோபதேசக் கதைகள் போன்ற பல்வேறு கதைத் தொகுப்புகளின் எழுத்துப் பிரதிகளும் உள்ளன.

### தொடக்கம்

இந்திய ஏட்டுப் பிரதிகளைத் திரட்டும் பணி ரஷ்யாவில் முதன் முதலாகத் தொடங்கியது 18-வது நூற்றாண்டிலாகும். இந்த அரும் பணியில் ரஷ்ய விஞ்ஞானப் பேரவை முக்கிய பங்கு வகித்து வந்திருக்கிறது. இக்காலத்தில் தம்மிடமிருந்த இந்திய இலக்கியம் பற்றிய சகல ஏட்டுப் பிரதிகளையும் 1919-ம் ஆண்டில் [illegible] பேரவை ஆசிய பொருட்காட்சிசாலையிடம் ஒப்படைத்தனர்.

இவ்வாறு கிடைத்த ஏட்டுப் பிரதிகளைப் பாங்குடன் பாதுகாத்து, துறைவாரியாகப் பிரித்து வைத்துள்ளனர். இந்த ஏட்டுச் சுவடிகள் தாம் சோவியத் விஞ்ஞானக் கழகத்தின் கீழ்திசைக் கலைக் கழகத்தின் நூல் திரட்டுக்கு அடிப்படையாக இருந்தன. தென் கிழக்காசியாவிலுள்ள இலங்கை, பர்மா, சயாம், இந்தோனேஷியா முதலிய நாடுகளிலிருந்து கிடைத்த ஏட்டுப் பிரதிகளும் இங்கு உள்ளன.

கீழ்த்திசைக் கலைக் கழகத்தில் 600க்கு மேற்பட்ட இந்திய ஏட்டுப் பிரதிகள் உள்ளன. இலக்கியம், விஞ்ஞானம், தத்துவம் முதலிய பல துறைகளைச் சேர்ந்தவை இவை.

தொன்மையான வேதகாலத்தைச் சேர்ந்த யஜுர் வேத சம்ஹிதையின் இரு பதிப்புகளைக் கொண்ட ஏடுகள் உள்ளன. பாரத தத்துவ நூலான சாந்தோக்கிய பரிஷத் ஸ்ரீ சங்கரர் இயற்றிய சப்த வஜ்ர சூசி உபநிஷத் பழங்கால இதிகாசமான மாபாரத காவியம், ராமாயணத்திற்கு அனுபந்தமாக எழுதப்பெற்ற அற்புத உத்தர காண்டம் இவற்றின் பிரதிகளும் உள்ளன. மாபாரதம் நாலாம் நூற்றாண்டில் பூர்த்தியான காவியம்.

### சமூக உறவுகள்

இவற்றைத் தவிரப் புராணக் கதைகளைச் சித்தரிக்கும் எண்பது ஏட்டுப் பிரதிகள் இருக்கின்றன. பல்வேறு புராண நிகழ்ச்சிகளை தேவலோக கந்தர்வ வாழ்க்கைகளை வர்ணிக்கும் மச்ச புராணம் போன்றவை இதில் உட்படும்.

பண்டை இந்தியாவில் இருந்த சமூக உறவுகளைச் சித்திரம் தீட்டியுள்ள வர்ண நீருஷ்டி என்னும் நூலும் இங்கு உள்ளது.

பல்வேறு புனித யாத்திரைத் தலங்களையும் அவற்றின் பெருமைகளையும் விளக்கும் நூல்கள் உள்ளன. இவை இந்தியாவின் பூகோள சாஸ்திரத்தை வரலாற்றுக் கண்கொண்டு ஆராயும் நூல்களாகும்.

தனித்தனி சமயப் பிரிவுகளாக விளங்கிய சைவம், வைணவம் போன்ற சமய தத்துவங்களை விளக்கும் நூல்கள் அக்கால நிலைகளில் அதாவது இடைக்கால இந்தியாவில் அரசியல், வர்க்கப் போராட்டங்களின் நிலைமைகளைக் காட்டுகின்றன. சிவ கீதை, பத்ம புராணம், குரு கீதை, ஸ்கந்த புராணம் இவை இதிலுள்ளன.

பல்வேறு கடவுளர், தேவிகள் இவர்களை வழிபடுவதற்கான மந்திர தோத்திரங்கள் அடங்கிய ஏடுகளும் இங்கு காணப்படுகின்றன.

### பௌத்த நூல்கள்

பதினைந்தாம் நூற்றாண்டு தொட்டு பழகு மொழியில் பாமரர்களுக்காகி வெளிவந்த பௌத்த இலக்கிய நூல்களின் சுவடிகள் பல உள்ளன. திரிபிடகம் என்னும் மூலாதார நூல் பாலி மொழியில் எழுதப்பட்டது. இதற்குப் பிற்கால சமூக வாழ்க்கைப் பற்றிய யதார்த்தங்கள் பலவற்றைக் காணலாகும்.

ஆதிகாலத்திய புத்த தத்துவத்தைப் பற்றிய விளக்கமான 'மிலிந்த பன்ஹ' என்ற நூலும், புத்த ஜாதகத்தின் வாழ்க்கையையும் மகிமையையும் வர்ணிக்கும் 'லலித விஸ்தாரம்' என்ற நூலும், அசோக சக்ரவர்த்தியின் அளவுகோலாகத் திகழும் 'அசோக வதனமாலா'வும் சிறந்தவை.

ஜைன இலக்கியத்தில் சித்திசேன் பத்மாவதி சரித்திரம் என்ற காவியமும் ஏட்டுப் பிரதி உருவில் உள்ளது. சாக்தேய சமயத்தின் தந்திரங்கள் நூலுருவில் உள்ளன.

### கவிதைகள்

கவிதை இசைப்பதில் இணையற்ற காளிதாசனின் 'ரகுவம்சம்' 'குமார சம்பவம்' முதலிய நூல்களும், வங்கக் கவிஞர் ஜயதேவரின் கீத கோவிந்தமும் உள்ளன.

சமஸ்கிருத பழமொழித் திரட்டு சொல் நிகண்டான அமர கோசம், காளிதாசன், பர்த்ருஹரி, குஸூம தேவன், வருருசி, கடகர்ப்பர, பமுழி, வேதாள பட்டன் போன்ற கவிகளின் நூல்கள் ஏட்டுப் பிரதிகளாக உள்ளன, பலமொழி சாகரம் ஒன்றும் இருக்கிறது.

மிக மிகப் பழமையான பாலி மொழி இலக்கண நூல் 'கட்டயன வியாகரண' சயாம் மொழி விளக்கத்துடன் இருக்கிறது. மொக்கல்லயன என்ற இலக்கண வித்வானுடன் சேர்ந்த வானரதன என்பவர் எழுதிய 'பிரயோக சித்தி' என்ற பாலி இலக்கண நூலும் உள்ளது.

இடைக்கால இந்தியாவின் சட்டநீதிகளைச் சுட்டிக்காட்டும் சட்ட நூல்களின் கொண்ட பதினைந்து ஏட்டுப் பிரதிகள் இருக்கின்றன.

### பிற இயல்கள்

வானநூல், சோதிட நூல்களில் மிகவும் சிறந்த பாஸ்வதி என்ற நூல் 11வது நூற்றாண்டில் சதானந்தர் என்பவரால் எழுதப்பட்டது. இதன் ஏடும், வான நூல், வைத்தியம், விவசாயம் சம்பந்தப்பட்ட நூல்களின் சுவடிகளும் உள்ளன.

தத்துவம் சம்பந்தப்பட்ட சுமார் 50 ஏட்டுப் பிரதிகளில் வைதீகத் தத்துவம் இடைக்கால இந்தியாவின் நிலைமைகளைச் சித்தரிப்பன. யோக முறையின் அடித்தளமாக விளங்கும் யோக சூத்திரம் என்ற நூல் உளது. இதன் ஆசிரியரான பதஞ்சலி கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

குருமுகி மொழியில் சீக்கிய சமய நூலான ஆதி கிரந்தம் உள்ளது. சமஸ்கிருதம், பிராகிருதம் இவ்விரு மொழிகளில் எழுதப்பட்ட பல்வேறு மொழிகளைப் பற்றி விரிவான தகவல்களைத் தரும் தத்துவ நூல்கள், இந்தத் திரட்டில் உள்ளன.

இந்தியர் எழுத்துக் கலை, அவர்கள் உபயோகித்த காகிதம், ஓலை, அவர்களின் பல்வேறு எழுத்து முறைகள் இவற்றையெல்லாம் சித்தரிக்கும் சிறந்த நூல்களின் ஏடுகள் இக் கழகத்தில் உள்ளன.

## எட்டு முனை

### ஜெயப்பிரகாசரின் ஞானேதயம்!

அரசியல் துறவரம் பூண்டவர் ஜெயப்பிரகாசர். இது உண்மையா இல்லையா என்பது ஆராய்ச்சிக் குரியது. அரசியலை விட்டுவிட்டேன்; சர்வோதயத்தில் புகுந்துவிட்டேன்; என்று அவர் அடிக்கடி கூறுகிறாரல்லவா?

ஆனல் காஷாயம் தரித்தமனிதருக்கு வீட்டு விஷயங்களில் ஞாபகம் வருவது பிசகு. மல்லுப்பிடியாக வீட்டு நினைவு அவரைப் பிடித்துக்கொண்டிருக்குமானால் ஒன்று காஷாயத்தை கழற்றி எறியவேண்டும். அல்லது வீட்டை அடியோடு மறக்க வேண்டும். இதில் ஏதாவது ஒரு வழியில் செல்ல மறுத்தால் "ஒரு போலி! என்றுகுற்றச்சாட்டு அவரைத் தேடிவரும்.

ஐரோப்பா சென்று திரும்பியவர் ஜெயப்பிரகாஷ். ஐரோப்பாவில் அவரது பேரன்பிற்கு உரித்தானவர் மேற்கு ஜெர்மனியில் ஹிட்லரிசத்தை இன்று பாதுகாத்து வருபவரான டாக்டர் அடினர். அவருடன் பல நாட்கள் விவாதித்தார். அங்கிருக்கும்போதுதான் பிரான்சில் தளபதி டிகால் சர்வாதிகாரம் தலைதூக்கியது. அதை உளங்கனிந்து வரவேற்றார் ஜெயப்பிரகாஷ். "என்னையும் இந்திய ஜனங்கள் அழைத்தால் டிகாலைப் போன்றே பதவி ஏற்கத் தயார்!" என்று முழங்கினர்.

ஜனநாயகத்தில் ஜெயப்பிரகாசருக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்பதற்கு இது ஒரு உதாரணம். இவ்வாறு ஐரோப்பாவில் ஞானஸ்னனம் செய்துவிட்டு ஊர் திரும்பினர். அறிக்கை விடுத்தார். நேருவைச் சந்தித்தார். தான் 'ஜோதி மரத்தடி'யில்கண்டு பிடித்ததைக் கூறினர். அது என்ன?

அரசியல்கட்சிகளால்! யாதொரு பலனுமில்லை நேருமுதற்கொண்டு எல்லா அரசியல் கட்சித் தலைவர்களும் தம்தம் கட்சிகளைக் கலைத்து விடவேண்டும். அல்லது தங்களது பதவிகளை ராஜினமாச் செய்து விட்டு மக்களிடையே சென்று ஜனநாயக சோஷலிஸத்திற்காக மாபெரும் இயக்கம் நடத்த வேண்டும்!

இதுதான் ஜெயப்பிரகாசரின் புதிய கண்டுபிடிப்பு! சோஷலிஸமும் வேண்டும், ஜனநாயகமும் வேண்டும். ஆனல் அரசியல் கட்சிகள் கூடாது! தலைவர்கள் தனிப்பட்ட முறையில் பிரச்சாரம் செய்தால் மந்திரவாதியின் கூடையில் மாஞ்செடி முளைப்பது போல் சோஷலிஸம் தோன்றி விடும். இதுதான் ஜெயப்பிரகாசர் கண்டுபிடித்தது!

சுதந்திரமடைந்த ஆசிய நாடுகளில் ஜனநாயகம் வளருவது அமெரிக்காவிற்குப் பிடிக்கவில்லை. ஜனநாயக வளர்ச்சி அன்னியச் சுரண்டலை அடியோடு கருவறுக்கும். எனவே பாகிஸ்தானில் ஜனநாயகம் படுகொலை செய்யப்பட்டது பர்மாவில் ராணுவத்திடம் அதிகாரம் ஒப்படைக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டது. இன்று தாய்லாந்திலும் இதே காட்சி!

இந்தச் சூழ்நிலையில் ஜனநாயகத்திற்கும் அரசியல் கட்சிகளுக்கும் எதிராக ஜெயப்பிரகாசர் பேசுகிறார்.

அரசியல் கட்சிகள் வேண்டாம் என்று பேசும் ஜெயப்பிரகாசரை வரவேற்க யார் யார் முன்வந்துள்ளார்கள் தெரியுமா? பாங்க் முதலாளிகளான முத்தையாச்செட்டியார், முருகப்பச்செட்டியார், மில் முதலாளி டி.சி. கோத்தாரி பல பங்கு மார்க்கெட் முதலாளிகள்.

ஜெயப்பிரகாசர் ஒரு அரசியல் தலைவரல்ல,' ஒரு அமைச்சருமல்ல, ஒரு அதிகாரியுமல்ல! அப்படியிருந்தும் அவரை முதலாளிகள் வரவேற்க முன் வந்ததேன்? ஜெயப்பிரகாசரின் புதிய தத்துவம் முதலாளிகளுக்குப் பிடித்திருப்பதுதானே! ஆம்! முழுக்க முழுக்க அவர்களுக்குப் பிடித்திருக்கிறது. சோமியன் குடுமி சும்மா ஆடுமா?

இன்று முதலாளித்துவ நாடுகளில் ஆளும் கட்சியைக் கண்டு முதலாளிகள் அஞ்சவில்லை; அமெரிக்கர்களும் அஞ்சவில்லை. அவர்களை எப்படியாவது சமாளித்துக் கொள்ளலாம்! ஆனல் இனி மேல் ஆளப்போகும் கட்சி... தொழிலாளி வர்க்கத்தின் அரசியல் குரலாக உள்ள கட்சி இன்றைய ஜனநாயகத்தின் மூலமே ஆட்சி பீடத்திற்கு வந்துவிடுமே! கேரளத்தில் ஆட்சிபீடத்தில் இருப்பதால் அல்லவா தொழிலாளிகள் உரிமைகளை சுலபத்தில் மறுக்கமுடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது! எனவே 'எந்த அரசியல் கட்சியும்கூடாது' என்ற பிரச்சாரம் தொழிலாளி வர்க்கத்திற்கு ஒரு அரசியல் கட்சி இல்லாமல் செய்துவிட உதவும் பிரச்சாரம்! இது முதலாளிக்கு நல்லதுதானே! அதனல் தான் ஜெயப்பிரகாசரை முதலாளிகள் ஓடோடியும் சென்று வரவேற்கின்றனர்! அதனுல்தான் அமெரிக்க கலாச்சாரக் கழகமும் சேர்ந்திருக்கிறது;

ஜெய் ஜெயப்பிரகாஷ்! ஜெய் முதலாளிகள்! ஜெய் டாலர் மாமா!

—கே. எம்.

### யூகோஸ்லாவியாவுக்கு 2 லட்சம் டன் ரஷ்ய கோதுமை

பெல்கிரேட், ஆக. 22—

1958 வர்த்தக உடன் பாட்டின் பிரகாரம் யூகோஸ்லாவியா ரஷ்யாவிடமிருந்து இரண்டு லட்சம் டன் கோதுமை வாங்கும்.

## குறிப்புகள்

### பிரெஞ்சு சர்க்காரின் விபரீதப் போக்கு!

அணு ஆயுத சோதனைகளைத் தடை செய்வதுபற்றி ஐ. நா. அரசியல் கமிட்டியில் விவாதம் நடைபெற்று வருகிறது. சோதனைகளை எவ்வித நிபந்தனையுமின்றித் தடை செய்ய வேண்டுமென்றும், சோதனைகளினல் மக்கள் சுவாசிக்கும் காற்று நச்சு மயமாக்கப் படுகிறதென்றும் சோவியத் சர்க்காரும், இந்திய சர்க்காரும் கூறி வருகின்றனர். பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகளும் கூட கொள்கையளவில் சோதனைத் தடையை ஏற்றுக்கொள்ளுகின்றன.

இந்நிலையில் டிகாலின் பிரெஞ்சு சர்க்கார் பிரதிநிதி, சோதனைத் தடைகளால் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை யென்றும், அணுகுண்டுகளை இல்லாமல் செய்தால்தான் இதனல் பயனுண்டு என்றும் கூறி, சோதனைத் தடைத் தீர்மானத்தை எதிர்த்துள்ளார். உண்மையில் அணு ஆயுத சோதனைகளைத் தடை செய்யக் கூடாது என்ற பிரெஞ்சு சர்க்காரின் எண்ணத்தையே இந்தப் போக்கு அம்பலப் படுத்துகிறது. ●

### கே. பி. மேனனின் புளித்துப்போன வாதம்

சர்வதேச கம்யூனிஸ அமைப்பு முறையை ஏற்படுத்தவும், கம்யூனிஸ்ட் சர்வாதிகாரத்தை ஏற்படுத்தவும் கேரள கம்யூனிஸ்ட் சர்க்கார் முயற்சித்து வருவதாக பி. சோ. தலைவர் டாக்டர் கே. பி. மேனன் அண்மையில் சென்னையில் ஒரு கூட்டத்தில் பேசியுள்ளார். இந்திய அரசியல் சட்டத்திற்கு உட்பட்டு, அதன் வழிதான் கேரள கம்யூனிஸ்ட் சர்க்கார் (ஏன், எந்த ராஜ்ய சர்க்காரும்) செயல்பட முடியும், செயல்பட்டு வருகிறது. அதனல் தான், கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையிட முடியவில்லை. அவ்வாறு தலையிடும்படி செய்வதற்கு டாக்டர் மேனனும், அவரது கட்சியினரும், கேரள காங்கிரஸ் தலைவர்களும் செய்த முயற்சிகளெல்லாம் தோல்வியடைந்து போனதை ஊரே அறியும். இந்நிலையில் டாக்டர் கே. பி. மேனன், 'கம்யூனிஸ்ட் சர்க்கார் கேரளத்தில் கம்யூனிஸ்ட் சர்வாதிகாரத்தை ஏற்படுத்துவதற்கு முயற்சித்து வருகிறது' என்ற புளித்துப்போன வாதத்தை மீண்டும் கூறியிருக்கிறார். ஒருக்கால் இது அவருடைய ஆத்ம திருப்திக்காகக் கூறப்பட்டிருக்கலாம். அல்லது ஒரே பொய்யைத் திருப்பித்திருப்பிக் கூறினல் ஏமாந்த மக்களை நம்பவைத்து விடலாம் என்று டாக்டர் மேனன் நினைக்கிறார் போலும்! ●

### மின்ஜெண்டியின் ரோமாபுரி பயணம்

ஹங்கேரியில் மக்கள்ஜனநாயக சர்க்காருக்கெதிராகக் கலகத்தைத் தூண்டி தோல்வியடைந்த கத்தோலிக்கப் பாதிரி மின்ஜெண்டி, போப் தேர்தலுக்காக ரோமாபுரி செல்லவிருக்கிறார் என்று தகவல் கிடைத்துள்ளது. ஹங்கேரியில் அமெரிக்க உதவியுடன் உள்நாட்டுக் கலகத்தைக் கிளப்பி, கம்யூனிஸ்ட் சர்க்கார் ஆட்சியைக் கவிழ்த்துவிட்டுத் தான் ஆட்சிபீடத்திற்கு வரலாம் என்று கனவு கண்டார். ஆனல் துரதிர்ஷ்டவசமாக அக்கனவு பலிக்கவில்லை. ஆகவே உலகிலுள்ள எல்லா கத்தோலிக்கர்களுக்கும் தலைமையாக உள்ள போப்பின் பதவியாவது தனக்குக் கிடைக்காதா என்று, அந்தத் தேர்தலில் பங்குகொள்ள ரோமாபுரி செல்லுகிறார் போலும்!

—வி. ஆர்.

## நீதி விசாரணை செய்க

### கேரள அரசாங்கத்துக்கு அ. இ. தொ. கா. வேண்டுகோள்

புதுடில்லி, அக். 21—

வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் மூணறு தோட்டத் தொழிலாளர்மீது போலீஸ் நடத்திய துப்பாக்கிப் பிரயோகம் பற்றி நீதிமன்ற விசாரணைக்குக் கேரள அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டுமென அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ் கேட்டுக்கொண்டிருக்கிறது.

"இந்தத் துப்பாக்கிப் பிரயோக நிகழ்ச்சி மிகவும் துரதிருஷ்டவசமானது. சுடுதலுக்கான சூழ்நிலைகள் நமக்குத் தெரியவில்லையாயினும் கேரள அரசாங்கம் உடனே நீதி விசாரணைக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமெனக் கேட்பதற்கு நாம் தயங்கமாட்டோம். சுடுதல் காரணமாக உயிரிழந்தவர் குடும்பங்களுக்கும் காயம்பட்டோருக்கும் நஷ்டஈடு தரவேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்" என்று அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸின் செயற்குழு விடுத்த அறிக்கையில் கண்டிருக்கிறது.

## பம்பாயிலிருந்து புறப்பட்ட எண்ணெய்க் கப்பலுக்கு விபத்து

### விபத்தில் உயிரிழந்த இந்தியர் எண்ணிக்கை தெரியவில்லை

பம்பாய், அக். 21—

சென்ற சனிக்கிழமையன்று பம்பாயிலிருந்து புறப்பட்ட எண்ணெய்க் கப்பலொன்று பாரசீக வளைகுடாவுக்குச் செல்லும் வழியில் பம்பாயிலிருந்து 520 மைல் வடமேற்கில் விபத்துச்குள்ளானது பற்றி தகவல்கள் கிடைத்திருக்கின்றன.

இறந்தர்களில் பத்துப்பேர் பிரிட்டிஷ் அதிகாரிகள் என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதரர் இன்னும் அடையாளம் கண்டுபிடிக்கப்படவில்லை.

இதில் மொத்தம் 70 பேர் பிரயாணம் செய்திருக்கின்றனர். இவர்களில் 16 பேர் பிரிட்டிஷ்காரர்கள் என்றும் 54 பேர் இந்தியர் எனவும் சொல்லப்படுகிறது. இந்த 54 இந்தியரும் பம்பாயிலிருந்து கப்பல் புறப்படுவதற்கு முன் வேலைக்குச்சேர்த்துக்கொள்ளப்பட்டனராம்.

50 பேர் இந்த விபத்துக்குள்ளாகாது தப்பியிருக்கின்றனர் என்று தெரிகிறது.

இவர்களைக் காப்பாற்றுவதற்காக உதவி நடவடிக்கைகள் உடனடியாக மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன.

விபத்துக்குள்ளான ஸ்டான்வாக் ஜப்பான் என்ற இந்த எண்ணெய்கப்பல் 28,000 டன் நிறையுள்ளது. இது 1950-ல் ஜப்பானில் கட்டப்பட்டது.

விபத்தில் இறந்த இந்தியர் பற்றிய சரியான தகவல் இன்னும் கிடைக்கவில்லை.

## பஞ்சாப் பிரதேச காங்கிரஸ் தலைவர் ராஜினமா

### கோஷ்டிச் சண்டைகளே காரணம்

புதுடில்லி, அக். 21—

கியானி குரு முக்சிங் முசாபிர் எம். பி. தான் வகித்து வந்த பஞ்சாப் பிரதேச காங்கிரஸ் தலைவர் பதவியை இன்று ராஜினமா செய்து விட்டதாக அ. இ. கா. க. பொதுக் காரியதரிசி சாதிக் அலி அறிவித்தார். பஞ்சாப் பிரதேச காங்கிரஸ் கமிட்டி விரைவில்கூடி தனது புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்கும் என்றும் அவர் கூறினர். புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவது வரை பதவியைத் தொடர்ந்து வகிக்குமாறு முசாபிர் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார்.

பஞ்சாப் பிரதேசக் காங்கிரசுக்குள் மிக மோசமான கோஷ்டிச் சண்டைகள் தொடர்ந்து நிலவுவதே முசாபிரின் ராஜினமாவுக்குக் காரணமாக இருக்கலாம் என்று காங்கிரஸ் வட்டாரங்கள் கருதுகிறனவாம்.

## தென் ஆப்பிரிக்கா போக்கு

### ஐ. நா. அரசியல் கமிட்டி கவலை

ஐக்கிய நாடுகள், (நியூயார்) அக். 21—

ஐக்கிய நாடு சபையின்வேண்டுகோள்களையும் பொருட்படுத்தாது தென் ஆப்பிரிக்க சர்க்கார் தங்கள் இன நிறக் கொள்கையைத் திருத்திக்கொள்வதற்குத் தவறியுள்ளது குறித்து ஐ. நா. பொதுச் சபையின் விசேஷ அரசியல் கமிட்டி தன் வருத்தத்தையும், கவலையையும் தெரிவித்துக்கொண்டது.

32 நாடுகளின் சார்பில் பிரேரேபிக்கப்பட்ட மேற்படி தீர்மானத்திற்கு 68 நாடுகள் சாதகமாக ஓட்டளித்தன. பிரிட்டன், போர்ச்சுகல், ஆஸ்ட்ரேலியா, பெல்ஜியம், பிரான்ஸ் ஆகிய நாடுகள் எதிர்த்து ஓட்டளித்தன. 4 நாடுகள் ஓட்டளிக்கவில்லை.

## கிழக்குப் பாகிஸ்தானில் அயூப்கான்

டாக்கா, அக். 20—

ராணுவ சர்வாதிகாரி அயூப்கான் இன்று டாக்கா வந்து சேர்ந்தார். பாகிஸ்தானுக்கு ராணுவ ஆட்சியால் பெரும் மாறுதல் ஏற்படுமென்றும், சட்டவிரோதமாக பணம் சேர்த்து வைப்பவர்களை எல்லாம் தான் பிடிப்போமென்றும் அதே சமயத்தில் யாரையும் வேட்டையாடமாட்டோம் என்றும் கூறினர்.

## ஆசிரியருக்குக் கடிதங்கள்

### ஒலிபரப்பும் அதிகார வர்க்கத்தின் கவனத்திற்கு

ஐயா,

இந்தி மொழியைப் பற்றிப் பல தவருன பிரச்சாரம் செய்யப்படுகிற இந்தச் சூழ்நிலையில் அகில இந்திய ரேடியோ நிலையத்தாரின் போக்கு இத்தகைய பிரச்சாரத்திற்கு ஊக்கமளிப்பதாகவே இருக்கிறது.

அகில இந்திய ரேடியோ நிலையத்தார் தமிழ் செய்தி அறிக்கை வாசிக்கும் முன்னும் இடையேயும் "ஆகாச வாணி"யின் அறிக்கை எனக் கூறுகின்றனர். வானெலி 'அறிக்கை என்று கூறினல் என்ன? தமிழில் ஒரு நல்ல சொல் இருக்கும்போது இதை உபயோகிக்காது ரேடியோ நிலையத்தார் அடம் பிடிப்பதின் மர்மமென்ன?

வை. பாண்டியன்,
பாண்டி.

●

### சர்க்கார்கவனிக்குமா?

ஐயா,

நம் ராஜ்யத்தில் ஆயிரக்கணக்கான ஆண், பெண் தொழிலாளிகள் பல்வேறு தொழிற்சாலைகளில் மிகக் குறைந்த கூலியில் கஷ்டப்பட்டு உழைக்கிறார்கள். குறைந்த கூலியில் வாழ்க்கை நடத்த முடியாது தொல்லை பல ஏற்படுகிறபொழுது, ஒன்றுசேர்ந்து சங்கத்தை நிறுவி, கூலிஉயர்வு, இதர சௌகர்யங்களுக்காகக் கிளர்ச்சி செய்கிறார்கள், லேபர் ஆபீஸர்கள் தலையிட்டு, நேரடி பேச்சுவார்த்தையினல் பிரச்னை தீராத போனல்; இறுதியில் சர்க்கார் பிரச்னையை கோர்ட்டிற்கு விடுகின்றன..

கோர்ட் இரு தரப்பு (முதலாளி தொழிலாளி) விவாதங்களைக் கேட்ட பின்னர், தீர்ப்புக் கூறுகின்றது. கோர்ட் தீர்ப்பு தொழிலாளிக்குச் சாதகமாக இருந்தால், முதலாளிகள் லாபமில்லை, பொருளாதாரக் கஷ்டம் என்று கூறி தொழிற்சாலைகளை மூடி விடுகிறார்கள். தொழிற்சாலைகள் மூடப்படுவதால், தொழிலாளிகள் வேலை இழந்து தவிக்க வேண்டிய நிலைமை ஏற்படுகின்றது.

தொழிற்சாலை மூடப்படுவதை எதிர்த்து, தொழிற்சங்கம் நடவடிக்கை எடுத்தால், தொழிற்சாலையில் கட்டுபடியாகவில்லை என்று முதலாளி மூடியது, சட்டப்பூர்வமானதுதான் என்று மற்ருேர் கோர்ட் தீர்ப்புக்கூறுகின்றது.

சேலத்தில் பனியன் பாக்டரியும், தேசிய ஸ்டார்ச் சில்க் பாக்டரியும் இந்த அடிப்படையில் மூடப்பட்டுவிட்டன.

தொழிலாளிகள் போராடி, தியாகம் செய்து, கோர்ட்டின் மூலம் நியாயம் பெற்ருலும், முதலாளிகள் அக்கிரமமாக எடுக்கும் நடவடிக்கை சட்டசம்மதம் பெற்று விடுவதால் தொழிலாளிகள் கஷ்டக் கண்ணீர் வடிக்கிறார்கள்.

தொழிலாளிகள் அரைப்பட்டினியில்தான் தவிக்கவேண்டும், சங்கம் வைத்து கிளர்ச்சி செய்யக் கூடாது என்று முடிவு செய்ய வேண்டும் அல்லது பெற்ற உரிமையை நிலைநாட்ட சர்க்கார் உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும்.

சர்க்கார் தலையிட்டு தொழிலாளிகளின் உரிமையைப் பாதுகாக்க ஆவன செய்யுமா?

சேலம், எஸ். எம். ஆர்.

●

### மேலதிகாரிகள் கவனிப்பார்களா!

ஐயா,

குளித்தலை சானிடரி இன்ஸ்பெக்டர், பஞ்சாயத்துத் தொழிலாளர்களை அனுவசியமாக திடீர் திடீரென்று சஸ்பெண்டு செய்கிறார். அப்படி சஸ்பெண்டு செய்யப்படும் தொழிலாளிக்கு மாதச் சம்பளம் ரூ. 41-14-0 என்றால், ரூ. 28-4-0தான் கணக்குத் தீர்த்துக் கொடுக்கிறார். தொழிலாளிகளிடம் பழிவாங்கும் முறையில் அனுவசியமாக வேலை வாங்குகிறார். தான் கூறும் வேலைகளைச் செய்யத் தயங்கினல் 'உனக்கு வேலையில்லை போ' என்று உத்திரவிடுகிறார். இங்கு 7 வண்டிகளுக்கு 4 மாடுகள்தான் உள்ளன. ஆகவே மீதி வண்டிகளை மாட்டுக்கு பதில் தொழிலாளிதான் இழுத்துச் செல்ல வேண்டிய நிலைமை. இவற்றையெல்லாம் மேலதிகாரிகள் கவனித்து ஆவன செய்வார்களா?

ஜி. சக்திவேல்,
குளித்தலை,

# திரைப்படத் தமிழ் எழுத்தாளர்கள் ஒன்று கூடினர்

## கச்சா பிலிம் வெட்டினை எதிர்த்துத் தீர்மானம்

சென்னை, அக். 20— திரைப்படத் தமிழ் எழுத்தாளர் சங்கக் கூட்டம் 17-10-58 எஸ். டி. எஸ். படத் தயாரிப்பு அலுவலகத்தில் திரு. இளங்கோவன் தலைமையில் நடைபெற்றது.

திரு. எஸ். டி. சுந்தரம் கூட்டத்துக்கு வந்திருந்தவர்களை வரவேற்றுப் பேசினர். வாழ்த்துச் செய்திகளையும் தந்திகளையும் படித்துவிட்டு கூட்டத்தின் நோக்கங்களை விரிவாக விளக்கினர்.

வந்திருந்த எழுத்தாளர்கள் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டனர்.

நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்படுவது வரை இடைக்காலத்துக்கு ஒரு அமைப்புக் குழு ஏற்படுத்த வேண்டுமென்று திரு. கண்ணதாசன் கூறினர். அதன்படி திரு. எஸ். டி. சுந்தரம் கீழ்க்கண்ட பெயர்களைப் பிரேரேபித்தார். கூட்டத்தினரும் ஏகமனதாக ஏற்றுக்கொண்டனர்.

தலைவர் திரு. சக்தி கிருஷ்ணசாமி, துணைத்தலைவர்கள் திருவாளர்கள், மு. கருணாநிதி, இளங்கோவன், செயலாளர்கள்: திருவாளர்கள் அ. மருதகாசி, இராம. அரங்கண்ணல், பொருளாளர் திரு. ப. நீலகண்டன், செயற்குழுவினர்: திருவாளர்கள் எஸ். டி. சுந்தரம், ஏ. பி. நாகராஜன், கம்பதாசன், ஏ. எஸ். ஏ. சாமி, கு. சா. கிருஷ்ணமூர்த்தி, கண்ணதாசன், ஏ. கே. வேலன், சின்ன அண்ணாமலை, டி. கே. சண்முகம், சாண்டில்யன், இலட்சுமணதாஸ், தஞ்சை ராமையாதாஸ், சங்கு சுப்பிரமணியம், முகவை ராஜமாணிக்கம் ஆகியோர்.

தலைவர், துணைத்தலைவர்கள், செயலாளர்கள் ஆகியோருடன் திருவாளர்கள் ஏ. பி. நாகராஜன், கு. சா. கிருஷ்ணமூர்த்தி, சங்கு சுப்பிரமணியம் முதலியோர் அடங்கிய சட்டதிட்டக் குழு அமைக்கப்பட்டிருக்கிறது. இக்குழு சங்கத்துக்கான சட்ட திட்டங்களைத் தயாரிக்கும்.

புதிய தலைவரை வரவேற்றும் வாழ்த்தியும் திருவாளர்கள் இளங்கோவன், மு. கருணாநிதி, முகவை ராஜமாணிக்கம், சின்ன அண்ணாமலை ஆகியோர் பேசினர்.

படத் தொழில் சம்பந்தப்பட்டவர்களும் நாட்டின் தொழில் நலனில் அக்கறை கொண்டவர்களும் உறுதியான காரணங்கள் காட்டி எதிர்த்தும் கச்சா பிலிம் இறக்குமதிக் கட்டுப்பாட்டினைப் பிடிவாதமாக அரசாங்கம் அமுல் நடத்துவதனால் ஏற்படும் பாதகங்களை விளக்கி, திரு. எஸ். டி. சுந்தரம் கொண்டுவந்த தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

சங்கத்தின் ஆரம்ப செலவுகளுக்காக வந்திருந்தவர்கள் நன்கொடையளித்தனர்.

திரு. அரங்கண்ணல் நன்றி கூறினர்.

### தீர்மான விபரம்

கச்சா பிலிம் கட்டுப்பாட்டினால் கலைக்கும், தொழிலுக்கும் பொதுமக்களுக்கும் அரசாங்கத்துக்கும் ஏற்படும் தீமைகள்பற்றித் திரைப்படத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் கருத்து பின்வருமாறு:

பிலிம் கட்டுப்பாடு காரணமாக, இத் தொழிலையே நம்பி வாழும் லட்சக்கணக்கான குடும்பங்கள் பட்டினி கிடக்க நேரும். ஏற்கனவே பல்லாயிரக்கணக்கானவர்கள் வேலை யிழந்து வீட்டுக்கனுப்பப்படும் நிலையை இக்கட்டுப்பாடு உண்டாக்கி யிருக்கிறது. இதனுல் அரசாங்கத்துக்கும் கோடிக்கணக்கான வரிப்பணம் நஷ்டமாகிறது.

### பாதகங்கள்

பொது மக்கள் நல்ல தரமுள்ள பிரதேச மொழிப் படங்களைப் பார்க்க முடியாத நிலை ஏற்படும். 'டப்' செய்யப்படும் இந்திப் படங்களையும் பழைய படங்களையுமே அரசாங்கத்தின் செய்திப் படங்களையும் தான் திரும்பத் திரும்பப்பார்க்க நேரிடும்.

கட்டுப்பாடு காரணமாக கள்ள மார்க்கெட் கொள்ளையும் கள்ளக் கடத்தலும் ஏராளமாகும் நிலை ஏற்படும். இப்போதே இந்த நிலை பயங்கர உருவம் எடுத்துவிட்டது.

### சாதாரணத் தயாரிப்பாளர்கள் அழிவதா?

தொழிலின் எதிர் காலமே இருண்டு தெரிகிறது.

அரசாங்கம் கச்சா பிலிம் உற்பத்தித் தொழிற்சாலை ஏற்படுத்தப் போகிறதென்கின்றனர். உத்தேசத் தொழிற்சாலையில் உற்பத்தியாகும் பிலிமை வாங்கிப் பயன்படுத்தவிருக்கும் சாதாரணத் தயாரிப்பாளர்களை இந்தக் கட்டுப்பாடு இப்போதே அழித்துவிடும். அப்படியானுல் உத்தேசத் தொழிற்சாலையிலிருந்து உற்பத்தியாகும் பிலிமை அரசாங்கம் யாரிடம் விற்கும்?

### யாரிடம் ஆலோசனை கேட்டது?

இத் தொழிலில் உள்ள பாட்டாளி மக்களின் பிரதிநிதிகளையும் தொழிலனுபவ முடையவர்களையும் கலந்து ஆலோசிக்காமல், ஏற்கனவே சம்பாதித்த லாபத்தை முடக்கி வைத்திருக்கும் பெரும் முதலாளிகளின் பேச்சைக் கேட்டுத்தான் இத்தொழில் சம்பந்தப்பட்ட முக்கிய கொள்கைகளை அரசாங்கம் உருவாக்குகிறது. இது மிகவும் வருந்தத்தக்க நிலையாகும்.

### உடனே நீக்குக

இந்தக் கருணையற்ற, முறையற்ற,கலைக்குதவாத கச்சாபிலிம் இறக்குமதி வெட்டை உடனே நீக்கவேண்டுமென வற்புறுத்துகிறோம். தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களைக் கைகொடுத்துக் காக்க முன்வருமாறு அரசாங்கத்தை வற்புறுத்துகிறோம்.

### அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தருவோம்

இந்த வெட்டினுல் அரசாங்கத்துக்கு மீதமாகும் அந்நியச் செலாவணி மிகவும் குறைவே இருப்பினும் அந்தத் தொகையையும், ஏன் அதைவிட அதிகமாகவே தயாரிக்கப்பட்ட படங்களை வெளிநாடுகளில் திரையிடுவதன் மூலம் அந்நியச் செலாவணியைப் பெற்றுத் தருகிறோம். கட்டுப்பாடு நீக்கப்பட்டால் கிடைக்கும் நற்பெயர் இவை யெல்லாவற்றிலும் பெரிது என்பதை அரசாங்கம் உணரவேண்டும்.

### ரூ. 200 கோடி முதலீடு

பிற ஆடம்பரப்பொருள்களுக்கு இறக்குமதித்தடை விதிக்கப்பட்டதைப் போல அல்ல இந்த நிலைமை. சுமார் 2 கோடி ரூபாய் பெறுமானமுள்ள கச்சாபிலிம் இத்தொழிலில் பயன்படுத்தப் பட்டாலும் ரூ. 200 கோடி முதலீடு செய்யப்பட்டிருக்கிறது என்பதை அரசாங்கம் உணரவேண்டும்.

### பிலிம் இறக்குமதி தவிர மாற்று வழி இல்லையே!

இங்கு உற்பத்தியாகும் உணவுப் பண்டங்கள், பிற பொருள்கள் ஆகியன போதாத நிலையில் அவற்றை அரசாங்கம் இறக்குமதி செய்கிறது. ஆனுல் இங்கு ஒரு அடிகூட உற்பத்தி ஆகாத, தொழிலுக்கு மிக அவசியமான தும் மிக மலிவானதுமான கச்சா பிலிம் இறக்குமதிக்குக் கட்டுப்பாடு விதித்திருப்பது முற்றிலும் நியாயமற்றது என்பதை மீண்டும் எடுத்துக் காட்டுகிறோம்.

### உயிர்ப்பிரச்னை

இந்தக் கட்டுப்பாடு பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களை நேரடியாகப் பாதித்திருக்கும் ஒரு உயிர்ப் பிரச்னையாகும். இதையெல்லாம் ஆராய்ந்து, இந்த வெட்டினை உடனடியாக நீக்க ஆவன செய்யுமாறு அரசாங்கத்தை வற்புறுத்துகிறோம்."

# காரைக்குடி தேர்தல் வழக்கு

## இதுவரை 105 சாட்சிகள் மனுதார் தரப்பில் விசாரிக்கப்பட்டுள்ளனர்

மதுரை, அக். 19— இன்று மதுரை தேர்தல் மன்ற நீதிபதி திரு பி.கே சுப்பிரமண்ய அய்யர் முன்பு காரைக்குடி தேர்தல் வழக்கானது தொடர்ந்து நடைபெற்றது. இதுவரை 104 சாட்சிகள் மனுதார் தரப்பில் விசாரிக்கப்பட்டுள்ளனர். இன்று 105-வது சாட்சியாக செங்கிரையைச் சேர்ந்த திரு எம். ஏ. வீரப்பன் விசாரிக்கப்பட்டார். அவர் எதிர் மனுதாருக்கு வேலை செய்த பெரிய கோட்டையைச் சேர்ந்த திரு. பிச்சகுட்டி என்பவர் வாக்காளர்களுக்கு 2-8-0 கொடுத்து எதிர் மனுதாருக்கு வாக்களிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டதைத் தான்நேரில்பார்த்ததாகக்கூறினுர்

திரு. டி.ஆர்.எஸ்.டி. கண்ணப்பன் முன்பு 101-வது சாட்சியாக விசாரிக்கப்பட்ட பிறகு, திரும்பவும் இன்று விசாரிக்கப்பட்டார். வழக்கு இனி தொடர்ந்து 23-ந் தேதி நடைபெறும். அன்று எதிர் மனுதாரரான முத்தையாச் செட்டியாரின் செயலாளர் திரு. வைத்திய சுப்பிரமணியன் சாட்சியம் அளிக்கலாம் எனத் தெரிகிறது.

# போனஸ் கொடுக்காதுபோனுல் போராட்டம்

சேலம், அக். 21— சேலம் நகர ஆயில் அண்டு ரைஸ் மில் தொழிலாளர் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் 19-10-58ல் சங்கத் தலைவர் தோழர் எஸ். எம். ராமையா தலைமையில் நடைபெற்றது. தொழிலாளிகள் போராடிப் பெற்ற பல்வேறு வசதிகள், உரிமைகள் தொடர்ந்து ஆயில், ரைஸ் மில் தொழிலாளிகள் வேலை செய்தும், சீசனல் பாக்டரி என்பதினுல் மறுக்கப்படுகின்றது. இந்த விதிவிலக்கு மாற்றப்பட்டு ஆயில் அண்டு ரைஸ் மில்களில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்குச் சட்டப்பூர்வமான உரிமைகள் கிடைக்கப் போராட வேண்டுமென்று கூற பின்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. போனஸ், இதர கோரிக்கைகளுக்காக தொடர்ந்து கிளர்ச்சி செய்தும் இன்னும் தீரவில்லை 28-10-58க்குள் கோரிக்கைகள் தீரவில்லை என்ருல் அதற்குமேல் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்வது.

2. சேலம் முனிசிபல் தொழிலாளர்களின் 24 அம்ச கோரிக்கைகளை சேலம் நகர சபை உடனே நடவடிக்கை எடுத்து கொடுக்க வேண்டும். எஸ். ஐ. வஹாப், எம். கே. மூத்து பேசினுர்கள்.

# தமிழ்நாடு ஓட்டல் தொழிலாளர் சம்மேளன நிர்வாகக் கமிட்டி கூட்டம்

## திருச்சியில் அக். 25, 26-ல்

சென்னை, அக். 20— தமிழ்நாடு ஓட்டல் தொழிலாளர் சம்மேளத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் திருச்சி முனிசிபல் சத்திரத்தில் அக்டோபர் 25, 26 தேதிகளில் நடைபெறும் சம்மேளனத்துடன் இணைந்து கொள்ள விரும்பும் எந்த சங்கமும் ஒரு பிரதிநிதியை அத்தாட்சிக் கடிதத்துடன் அனுப்பவும் என்று சம்மேளனத்தின் பொதுக் காரியதரிசி திரு. கே.எம். ஹரிபட் அறிவிக்கிருர்.

# ஸ்ரீவில்லிபுத்தூர் ஓட்டல் தொழிலாளர் வெற்றி

ஸ்ரீவில்லிபுத்தூர், அக். 20— ஸ்ரீவில்லிபுத்தூர் லெக்ஷ்மி விலாஸ் காபி, சாப்பாடு ஓட்டலில் நீண்ட காலமாக ஷாப் சட்டப்படி எந்தவிதமான சலுகைகளும் கொடுக்கப்படாமலிருந்தது. ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியன் காரியதரிசி திரு. வி. ஆதிநாராயணன் ஓட்டல் முதலாளியை நேரில் கண்டு பேசினுர். நிர்வாகம் கோரிக்கையை ஒப்புக்கொண்டு தொழிலாளிகளுக்கு நஷ்ட ஈடாக உடனே ரூ 350 கொடுத்தது. ஷாப் சட்டத்தை அமுல் நடத்துவதாகவும் முதலாளி ஒப்புக் கொண்டார்.

தவிர திரு. கருப்பையா நாடார் ஓட்டலில் எவ்விதக் காரணமுமின்றி திடீரென்று வேலையை விட்டு நீக்கப்பட்ட திரு.கோவிந்தராஜ் என்பவருக்கு, சங்கம் நடவடிக்கை எடுத்துக்கொண்டதின் பேரில், ரூ. 40 நஷ்டஈடு தரும்படி லேபர் ஆபீசர் திரு. கே. எ. ராமமூர்த்தி உத்திரவிட்டார்.

### விலாசமாற்றம்

இதுவரையிலும் இந்நகர் லைபரரி தெருவிலிருந்த நகர கம்யூனிஸ்ட் கட்சி காரியாலயமும், ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியன் காரியாலயமும் மேலரத வீதி 41/845 என்ற விலாசத்திற்கு மாற்றப்பட்டுள்ளன.

# பெங்களூர் ஜனஜாக்ரதை சங்கம்

பெங்களூர், அக். 16— சங்கத்தின் மகாசபைக் கூட்டம் சென்னப்பா தலைமையில் நடைபெற்றது. தலைவராக எம். ராமசாமியும் உபதலைவராக கே. வி. வீரபத்தரப்பாவும்,காரியதரிசியாக எம். சி. வெங்கடராமும் உப காரியதரிசியாக எல். சீதாராமும், பொக்கிஷதாரராக ஏ. கண்ணப்பாவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# ஆட்குறைப்பை எதிர்த்து ஜவஹர் மில்லில் சத்தியாக்கிரகம்

சேலம், அக். 21— சேலம் ஜவஹர் மில் நிர்வாகம் 46 தொழிலாளிகளை ஆட்குறைப்பு செய்வதாக நோட்டீஸ் கொடுத்தது. ஆட்குறைப்பு அவசியமில்லை என்று சேலம் ஜவஹர் மில் தொழிலாளர் சங்கம் ஆட்சேபித்து நடவடிக்கை எடுத்தது. 20-10-58ல் மில் நிர்வாகம் ஆட்குறைப்பு நோட்டீஸை ரத்து செய்து, இதர கோரிக்கைகளைக் கொடுக்க இசையாத போனுல் வேலைநிறுத்தம் உட்பட எல்லா விதமான நேரடி நடவடிக்கைகளையும் ஈடுபடவேண்டுமென எச்சரிக்கை செய்தது. மில் நிர்வாகம் நியாயமான சமரசத்திற்கு வராததினல் இன்று நடந்த கூட்டத்தில் பிரச்சனை தீருமவரையில் வேலை முடிந்து வீடு திரும்பும்பொழுது மானேஜிங் ஏஜண்டு காரியாலயத்தின் முன்பு 30 தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம் செய்வதென முடிவு செய்யப்பட்டது. இந்த நடவடிக்கைக்கு தொழிலாளர்கள் ஆதரவு காட்டி கை உயர்த்தினர்கள்.

இக் கூட்டத்தில் தோழர்கள்: ஏ. பெரிய தம்பி, எஸ். எம். ராமையா ஆகிய இருவரும் நிலைமையை விளக்கிக் கூறினர். இந்த முடிவை எல்லா அதிகாரிகளுக்கும் அனுப்பியிருக்கிறார்கள். ந-ஸி.

# தங்கச்சுரங்கத் தொழிலாளிகளுக்கு 10,12,000 ரூபாய் கூலி உயர்வு!

ஆண்டர்சன்பேட்டை, அக். 21— கோலார் தங்கச் சுரங்கத் தொழிலாளிகளின் கூலிகிரேடுகளில் உயர்வுகோரி, ஏ. ஐ. டி. யு. சி., ஐ என். டி யு. சி. சங்கங்கள் மானேஜ்மெண்டாருடன் பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காண இயலவில்லை. பின் தொழில் ட்ரிப்யூனல் பரிசீலனைக் கெடுத்துக்கொண்டு, திரு. எச். கே. வியாஸ் நீதிபதி தலைமையில் நடந்த கோர்ட் தன் தீர்ப்பை சமீபத்தில் வெளியிட்டுள்ளது. அத்தீர்ப்பின்படி கூடுதலாக, கோலார் தங்கச் சுரங்கத் தொழிலாளருக்கு வருடத்தில் ரூ. 10 லட்சத்து 12 ஆயிரம் கூலி உயர்வு கிடைக்கும்.

தொழிலாளிகளின் மொத்த எண்ணிக்கை சுமார் 20,000 பேராகும். அதில் 64 சதவிகிதம் சுரங்கத்திலும், 36 சதவிகிதம் சர்பேசிலும் வேலை செய்கின்றனர்.

கூலி கிரேடில் உயர்வுகோரி சங்கங்கள் கோரியபடி பார்த்தால் மைசூர் மைன் ரூ 50·40 லட்சம் சாம்பியன் ரூ 6·80 லட்சம் நந்திதுருகம் ரூ 5·00 லட்சம் ஒரு வருடத்தில் கூலி உயர்வுக்காக செலவாக வேண்டியேற்பட்டிருக்கும்.

இந்தக் கூலி உயர்வுபடி தினசரி சம்பள முறையில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு ரூ. 7 லட்சத்து 10 ஆயிரமும், மாத சம்பளம் பெறும் தொழிலாளிகளுக்கு ரூ 3 லட்சத்து 2 ஆயிரமும் கூடுதலாக கூலி உயர்வு கிடைக்கும்.

21-10-1958ல் கோலார் தங்கச் சுரங்க மானேஜ்மெண்டாருக்கும் தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகளுக்கும் Code for Discipline in Industry—என்பது பற்றிய விவாதம் நடைபெற்றுள்ளது. மே 19, 20—1958 தேதிகளில் நைனிடாலில் நடைபெற்ற இந்திய தொழில் முக்கூட்டு மாநாடு ஏற்றுள்ள வழியில், கோலார், தங்கச் சுரங்க மானேஜ்மெண்டாரும், கோலார் தங்கச்சுரங்க தொழிற் சங்கங்களும் நடந்து கொள்வது உசிதமானதென அபிப்பிராயப் பட்டுள்ளனர்.

இதுபற்றிய சரியான விபரத்தை ஏ. ஐ. டி. யூ. சி. தலைமையிலிருந்து பெற்ற பின்பே, ஒரு முடிவிற்கு வர சாத்யப்படும் என தோழர்கள் கே. எஸ். வாசன் வி. எம். கோவிந்தன் கூறியுள்ளதை மானேஜ்மெண்டார் ஏற்றனர்.

# குடியாத்தம் மக்கள் கோரிக்கை

## முதலமைச்சர் காமராஜரிடம் கம்யூனிஸ்ட் கட்சி மகஜர்

குடியாத்தம், அக். 18— சென்னை ராஜ்ய முதலமைச்சர் திரு. காமராஜ் அண்மையில் குடியாத்தத்திற்கு விஜயம் செய்திருந்தபோது, கம்யூனிஸ்ட் கட்சி குடியாத்தம் கிளை சார்பில் அதன் செயலாளர் வி. முனுசாமி, ஒரு மகஜர் சமர்ப்பித்தார். அம்மகஜரில் கீழ்வரும் கோரிக்கைகள் வற்புறுத்தப்பட்டுள்ளன:

1. இவ்வூர் சர்க்கார் ஆஸ்பத்திரியில் நோயாளிகள் தொகை அதிகரித்து விட்டதால் மேலும் இரு டாக்டர்கள், கம்பவுண்டர்கள், நர்ஸ்கள், லேடி டாக்டர் நியமிக்கப்பட வேண்டும் இந்த ஆஸ்பத்திரியில் ஒரு 'எக்ஸ்ரே' பிரிவும் ஏற்படுத்தப்பட வேண்டும்.

2. பெண்கள் பயிற்சிப் பாடசாலை விஸ்தரிக்கப்பட வேண்டும். ஹாஸ்டலுக்கு ஒரு வசதியான கட்டிடம் கட்டப்படவேண்டும்.

3. குழாய் தண்ணீர் வசதி மேலும் விஸ்தரிக்கப்பட வேண் வேண்டும்.

4. உடனடியாக சாக்கடை கால்வாய் கட்டப்படவேண்டும்.

5. வெளியூரிலிருந்துவரும் பிரயாணிகள் தங்குதற்கு, 4 அல்லது மேற்பட்ட அறைகள் கொண்ட ஒரு விடுதி கட்டப்பட வேண்டும்,

6. பொதுக் கூட்டங்கள் நடத்துவதற்கு ஒரு டவுன் ஹால் கட்டப்படவேண்டும்.

7. சேரிவாழ் மக்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கப்பட வேண்டும் ஏழை மக்கள் நகர சபை சிப்பந்திகள், சுகாதாரத் தொழிலாளர்கள் முதலியவர்களுக்கும் வீடு கட்டும் திட்டம் வேண்டும்.

8. கைத்தறி நெசவுத் துணி விற்பனைப் பொறுப்பை சர்க்காரே ஏற்கவேண்டும்.

மேலும் பல தொழில் பயிற்சிக் கழகம், முனிசிப் கோர்ட், மோர்தானு அணை, ஏரி அபிவிருத்தி, பட்டு கோரா உற்பத்தியாளர்களுக்கு மான்யம், புறம்போக்கு நிலங்களை ஏழை விவசாயிகளுக்கு அளிப்பது, நியாயவிலைக் கடைகள், விவசாயக் கடன் பேங்கு முதலிய இன்னும் பல கோரிக்கைகளும் அம் மகஜரில் அடங்கியுள்ளன.

# கம்யூனிஸ்ட் கட்சி கிளை மகாநாடுகள்

சென்னை, அக். 20—

### எழும்பூர்

சென்னை எழும்பூர் கம்யூனிஸ்ட் கட்சியின் ஏரியா மாநாடு ஏ. கோவிந்தசாமி தலைமையில் நடைபெற்றது.

சி. ஏ. வெங்கடேஸ்வரலு அறிக்கை வாசித்தார்.

புதிய ஆண்டுக்கு சி. ஏ. வெங்கடேஸ்வரலு செயலாளராகவும் அம்பலவாணன், சக்ரபாணி, திவாகரன், என். லோகநாதன், குப்புசாமி, வர்கிஸ் ஆகியோர் உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாநாட்டினை யொட்டி நடந்த பொதுக்கூட்டத்தில், என். சங்கரய்யா, டி. நாகிரெட்டி எம். பி., வாசுதேவ நாயர் எம். பி. ஆகியோர் பேசினர். ஜனசக்தி ஆசிரியர் கே. முத்தையா மொழி பெயர்த்தார்.

### பாண்டி (தஞ்சாவூர்)

கம்யூனிஸ்ட் கட்சியின் பாண்டிக் கிளை மாநாடு 16-10-58 அன்று நடைபெற்று. எஸ். வடிவேல், மாணிக்கம் ஆகியோர் திருத்துறைப்பூண்டி தாலுகா கமிட்டியின் சார்பில் கலந்து கொண்டனர். வை. பாண்டியன் அறிக்கை சமர்ப்பித்தார்.

புது ஆண்டுக்கு வை. பாண்டியன் செயலாளராகவும் பி. தனுஷ்கோடி துணைச் செயலாளராகவும் வி. காசிநாதன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பாண்டி வட்டாரத்தில் நீர்ப்பாசனத் திட்டங்கள்பற்றி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### குடந்தை தாலூகா

7-10-58ல் மருத்துவக்குடி கிளை மாநாடு தோழர் தங்கராஜ தலைமையில் நடந்தது. தா. க. காரியதரிசி தோழர் கோபு கலந்துகொண்டார். மூன்று மாதங்களுக்கு முன்னுல் 8 பேருடன் ஆரம்பிக்கப்பட்ட கிளை தற்போது 26 பேர்கள் கொண்டதாக வளர்ந்திருக்கிறது. 7 பேர்களடங்கிய நிர்வாகக் கமிட்டிக்கு பா. மாரிமுத்து காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### கதிராமங்கலம்

9-10-58ல் கதிராமங்கலம் கிளை மாநாடு தோழர் பி. சிங்காரம் தலைமையில் நடந்தது. முன்னுள் செயலாளர் கலியமூர்த்தி நடந்த வேலைகள் பற்றி அறிக்கை சமர்ப்பித்தார். ஜனவரியில் 6 பேருடன் ஆரம்பித்த கிளை இப்பொழுது 24 பேர் கொண்டதாக ஓங்கியிருப்பதைப் பாராட்டியும் உறுப்பினர் கடமைகளை வலியுறுத்தியும் தோழர் கோபு பேசினுர்.

காரியதரிசியாக என். சுந்தரேசனும் உதவி காரியதரிசியாக கோ. நாராயணனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கடைவீதியில் கட்சிக் காரியாலயம் திறக்கப்பட்டிருக்கிறது.

### ஆடுதுறை

10-10-58ல் ஆடுதுறை கிளை மகாநாடு நடந்தது. முன்னுள் செயலாளர் எஸ். ராமசாமி அறிக்கை சமர்ப்பித்தார். தா. க. சார்பில் தோழர்கள் கோபு, பிச்சை கலந்து கொண்டனர். தோழர் கனகசபை புதிய காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### பட்டீஸ்வரம்

11-10-58ல் பட்டீஸ்வரம் கிளை மகாநாடு தோழர் ஜி. வி ராமச்சந்திரன் தலைமையில் நடந்தது. தா. க. சார்பில் கோபு, சக்கரபாணி கலந்து கொண்டனர். காரியதரிசியாக டி. எஸ். கோவிந்தசாமியும், உதவிக் காரியதரிசியாக ஜி கலியபெருமாளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### சுவாமிமலை

11-10-58ல் சுவாமிமலைக் கிளை மகாநாடு தோழர் ஹாஜா முகைதின் தலைமையில் நடந்தது. தா. க. சார்பில் தோழர்கள் பிச்சை, குருசாமி கலந்து கொண்டனர். பஞ்சாயத்து உறுப்பினர் என். டி. அப்துல் காதரே மீண்டும் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### திருபுவனம்

12-10-58ல் திருபுவனம் மாநாடு தோழர் பி. ஆர். முத்துசாமி தலைமையில் நடைபெற்றது. தா க. சார்பில் கோபு, ராமமூர்த்தி விவாதங்களில் கலந்துகொண்டு உதவினர்.

செயலாளர் சமர்ப்பித்த அறிக்கையும், கணக்கும், திருத்தங்களுடன் அங்கீகரிக்கப்பட்டது. அண்மையில் நடக்க இருக்கும் பஞ்சாயத்து தேர்தலில் கட்சி அபேட்சகர்களை நிறுத்துவதென்றும் அதற்கு வேண்டிய தயாரிப்புகளை மேற்கொள்ள ஒரு குழுவும் நியமிக்கப்பட்டது.

தோழர் ப. ராமானுஜம் காரியதரிசியாகவும் வி. காசிநாதன் உதவிக் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### தாராசுரம்

18-10-58ல் தாராசுரம் கிளை மாநாடு தோழர் கே. எஸ். நாகசாமிதலைமையில் நடைபெற்றது. தா. க. சார்பில் தோழர்கள் கோபு, கணேசன் பங்கெடுத்துக் கொண்டனர். காரியதரிசி டி. வி. எஸ். மணி சமர்ப்பித்த அரசியல் ஸ்தாபன அறிக்கை பலத்த விவாதத்திற்குப் பிறகு ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது

விரைவில் கிளைக்கென காரியாலயம் அமைப்பதென்றும் வாடகைக்காக அங்கத்தினர் அனுதாபிகள் மூலம் விசேஷ நிதி திரட்டுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

என். எஸ். ஆர். மூர்த்தி காரியதரிசியாகவும் கே. எஸ். நாகசாமி உதவிக் காரியதரிசியாகவும், பி. ரெத்தினம் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### குடந்தை

19-10-58ல் குடந்தை நகரிலுள்ள 100 அங்கத்தினர்களடங்கிய மகாநாடு தோழர் ஆர். கன்னையன் தலைமையில் நடந்தது.

ஏற்கனவே தனித்தனியான 5 கிளைகளில் பிரிந்திருந்த அனைவரையும் ஒன்றிணைத்து நகர முழுவதற்குமான ஒரே கிளையாக இணைத்து விடுவதென்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

ஜில்லாக் கமிட்டி உறுப்பினர் வீ. ராமசாமி கலந்துகொண்டு சிறப்புரையாற்றினுர்.

தா. க. சார்பில் தோழர்கள் கோபு, குருசாமி, பிச்சை விவாதத்தில் பங்குகொண்டனர்.

ஆண்டறிக்கையின் மீது நடந்த விவாதத்தின் வெளிச்சத்தில் கடந்தகால அநுபவங்களை முறையாகத் தொகுத்து படிப்பினைகளைத் தீர்மான வடிவத்தில் வரையறுத்துத் தரும் பொறுப்பு புதிய நிர்வாகக் கமிட்டியிடம் ஒப்படைக்கப்பட்டது.

நகர கிளைக்கு வீ. குருசாமியைக் காரியதரிசியாகவும், ஏ. பாலுவை உதவிக் காரியதரிசியாகவும், பி. எஸ். கிருஷ்ணசாமியை பொருளாளராகவும் கொண்ட 15 பேரடங்கிய நிர்வாகக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

தோழர் ஜெயலட்சுமி பிச்சை சர்வ தேசிய கீதம் பாட நிகழ்ச்சி முடிவுற்றது. —ந. கி.

# விளாத்திகுளம் செய்திகள்

விளாத்திகுளம், அக். 20— 12-10-58ல் கம்யூனிஸ்ட் கட்சி கூட்டம் நடைபெற்றது. விளாத்திகுளம், வேம்பார் பஸ் சர்வீஸ் உடனடியாக விடவேண்டுமென ஏற்பாடு செய்ய வற்புறுத்தப்பட்டது. பெரியகுளம் கண்மாயைப் புதுபித்துச் சாகுபடிக்குப் பயன்படச் செய்யவேண்டுமென்று இன்னெரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### மரங்களை வெட்டுவதற்கு எதிர்ப்பு

விளாத்திகுளத்தை அடுத்துள்ள ஆற்றங்கரை ஜமீன் கிராமம் இப்போது அரசாங்கத்தால் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்தப் பகுதியிலுள்ள பச்சைக் கருவேல மரங்கள் ஆயிரக் கணக்கில் அனுமதியின்றி வெட்டப்பட்டு விற்கப்படுகின்றன.

இதை எதிர்த்து ஜில்லா கலெக்டர், எஸ்டேட் மானேஜர் ஆகியோருக்கு முறையீடு செய்யப் பட்டும் இதுவரை பயனேதும் ஏற்படவில்லை.

### மராமத்து மந்திரி வருகை

சென்னை மராமத்து மந்திரி கக்கன் 16-10-58 அன்று இங்கு வந்தார்.

தங்கள் குறைகளைக் கூறுவதற்காக மகஜர்களுடன் நெடுநேரம் காத்திருந்த மக்களைக் கவனிக்காது சென்றுவிட்டார் மந்திரி.

ஸ்ரீவள்ளி சினிமாக் கொட்டகையில் நடந்த பொதுக் கூட்டத்தில் வழக்கம்போல கம்யூனிஸ்ட்களைக் குறைகூறிவிட்டு ஒட்டப்பிடாரம் சென்றுவிட்டார் கக்கன்.

# பஞ்சாயத்து தலைவராக கம்யூனிஸ்ட் தேர்வு

சிதம்பரம், அக். 19— சிதம்பரம் தாலூகா கிள்ளை பஞ்சாயத்து போர்டு தலைவர் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினரும், பொன்னந்திட்டு விவசாய சங்கத் தலைவருமான தோழர் எஸ்.ஏ. ஆழவார் 7 ஓட்டுகள் பெற்று வெற்றிபெற்ருர். அவரை எதிர்த்த காங்கிரஸ்காரர் சுத்தாரி என்பவர் 5 ஓட்டுகள் பெற்று தோல்வியடைந்தார்.

# மதுரைத் திருவள்ளுவர் கழகம்

## கலைமகள் விழா

மதுரை, அக். 20— திருவள்ளுவர் கழகத்தின் சார்பில் கலைமகள் விழா மூன்றும்நாள் நிகழ்ச்சி வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திரு. எல். நாராயணன் தலைமை வகித்தார். தியாகராசர் கல்லூரி விரிவுரையாளர் திரு இராம. இராமநாதன் திருமதி அ. வே. மங்களேஸ்வரி ஆகியோர் சொற்பொழிவாற்றினர். திரு. மீ. கந்தசாமிப் புலவர் நன்றி கூறினுர்.

# வேலைநிறுத்தம் நீடிக்கிறது

## உண்ணுவிரதம் 13-வது நாள் தொடர்கிறது!

### பொதுக்கூட்டத்தில் கே. டி. கே. தங்கமணி, ரமணி பேச்சு

மூணுறு, அக். 20— தேவிகுளத்திலுள்ள 33 தேயிலைத் தோட்டங்களில் இன்று 17-வது நாளாக வேலைநிறுத்தம் நடைபெறுகிறது. தொழிற்சங்கத் தலைவர் திரு. செல்லையா இன்றுடன் 13-வது நாளாக உண்ணுவிரதமிருந்து வருகிருர். கேரளத் தொழில் மந்திரி திரு. டி. வி. தாமஸ் 14-ம் தேதிமுதல் சமரசம் ஏற்படுத்த தீவிரமாக முயலுகிருர் என்று தெரிகிறது. இதற்கிடையில் ஐ. என். டி. யு. சி. யைச் சேர்ந்தவர்கள் எஸ்டேட்டுகளில் பொய்ப் பிரச்சாரம் செய்து வேலைநிறுத்தத்தை உடைத்து வருகிருர்கள். 17, 18ஆகிய தேதிகளில்கூடுதலான ஆட்கள் வேலைக்குச் சென்றிருப்பதாகத் தெரிகிறது. ஆனுல் இன்னும் மெஜாரிட்டியான ஆட்கள் வேலை நிறுத்தம் செய்து வருகிருர்கள். ஓர்க்ஷாப்பில் 22-வது நாள் வேலை நிறுத்தம் நடைபெறுகிறது.

நேற்று (19-10-58) பிற்பகல் சுமார் 1 மணிக்கு ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் மூணுறு கால்பந்தாட்ட மைதானத்தில் நடந்தது. ஆயிரக் கணக்கான ஆண், பெண் தொழிலாளர்கள் ஊர்வலமாக கோஷங்களை முழங்கிக் கொண்டு கால்பந்தாட்ட மைதானத்திற்கு வந்து சேர்ந்தனர். கூட்டத்திற்கு திருமதி ரோசம்மா தலைமை வகித்துப் பேசுகையில், காலையில் நடந்த மானேஜிங் கமிட்டி கூட்டத்தில், நீண்ட விவாதத்திற்குப் பின், வேலை நிறுத்தப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தவேண்டுமென முடிவெடுக்கப் பட்டிருப்பதாக அறிவித்தார்.

### கே. டி. கே. தங்கமணி

"உலகத்திலேயே இவ்வளவு மிகப் பெரிய அளவில் மாபெரும் வேலைநிறுத்தம் நடைபெற்றதாக நான் கூறுவதற்கில்லை. அந்த அளவிற்கு வெற்றிகரமாக இன்றும் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. போராட்டம் இரண்டு முறையில் நடைபெறுகிறது. ஒன்று உண்ணுவிரதப் போராட்டம். மற்றென்று வேலைநிறுத்தப் போராட்டம் போலீஸ்காரர்கள் கருங்காலி வேலைகள் செய்திருப்பதை கேள்விப்பட்டு மிக்க வருந்துகிறேன். போலீஸார் தங்கள் கடமையைத்தான் செய்யவேண்டும். அலுவலகம், பங்களா, தேயிலை ஆலை இவற்றைப் பாதுகாப்பதுதான் போலீசாரின் கடமை. இதைவிட்டு, தொழிலாளிகளின் வீடுகளுக்குச் சென்று, அவர்களை வேலைக்கு அழைத்துச் செல்வது கூடாது. தேயிலைக் காட்டில் நின்றுகொண்டிருப்பதுவும் இவர்கள் வேலையில்லை. ஆகவே, போலீசார் கருங்காலி வேலை செய்யவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்." என்று திரு. கே. டி. கே. தங்கமணி பேசி முடித்தார்.

### கருங்காலிகளுக்கு ரமணியின் அறிவுரை

அடுத்தபடியாக திரு. ரமணி பேசுகையில், முதலாளி பணிய வேண்டுமானுல் தொழிலாளர் ஒற்றுமை மிக மிக அவசியம். தொழிலாளி ஒற்றுமை என்றுமே வெற்றிதரும் என்ருர். வேலைக்குச் செல்லும் கருங்காலிகளுக்கு, "நீங்கள் இன்று வேலைக்குச் செல்வதால், முதலாளி தன் பங்களாவைத் தரப் போவதில்லை. உங்களை லண்டனுக்கு அழைத்துப் போகப் போவதில்லை. உங்களுக்குப் 'பெண்' கொடுத்தோ,'பெண்' எடுத்தோ, வேறு எந்த முறையிலோ உதவப் போவதில்லை. நீங்கள் என்றென்றும் தொழிலாளர் மத்தியிலேயே வாழப் போகிறீர்கள். உங்களுக்கு ஆபத்தில் உதவுவது பக்கத்து வீட்டுத் தொழிலாளி. தொழிலாளிக்கு தொழிலாளிதான் துணை. ஆகவே நீங்களும் ஒன்றுபட்டு வேலைநிறுத்தத்தில் ஈடுபட வேண்டும்" என்று அறிவுரை கூறினுர்.

### ரோசம்மா

ஐ. என். டி. யு. சி.யினர் தாம் ரூ. 20 அட்வான்ஸ் வாங்கித் தரப்போவதாக பொய்ப்பிரசாரம் செய்தது தொழில் மந்திரி திரு. டி. வி. தாமஸ் கவனத்திற்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. அது தவறு என்றும், தான் மானேஜ்மெண்டுக்குக் கொடுத்திருக்கும் யோசனை மானேஜ்மெண்டுக்குத் தவிர வேறு யாருக்கும் தான் தெரியப்படுத்தவில்லையென்றும், மந்திரி அறிவித்திருப்பதாக திருமதி ரோசம்மா தன் முடிவுரையில் கூறினுர்.

கூட்டத்தில் தோழர்கள் ஸ்டான்லி, சேலம் சண்முகம், கோவை கருப்பசாமி, சங்கரன்குட்டி, ஜேக்கப் ஆகியோர் போராட்ட நிதி சேகரித்தார்கள்.

# பஞ்சாயத்துத் தேர்தல்களில் கம்யூனிஸ்ட்கள் வெற்றி

### செம்பாட்டூர்

செம்பாட்டூர், அக். 18— புதுக்கோட்டை வட்டாரத்திலுள்ள செம்பாட்டூர் பஞ்சாயத்துத் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் போட்டியிட்ட எட்டுப் பேரில் ஆறு பேர் வெற்றி பெற்றனர். இந்தப் பஞ்சாயத்தில் மொத்த உறுப்பினர் ஒன்பது பேர்.

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் வெற்றி பெற்ருேர் வருமாறு அ வெ. ஆலப்பனம்பலம், எம். பஞ்சலிங்கம், ஏஸ்.பி. கருப்பையா மா.மு. முத்தையா, ச. மைக்கேல் உடையார் (அய்யாக்கண்ணு) பி. பிரமன் ஆகியோர்.

### உடன்குடி

உடன்குடி பஞ்சாயத்துத் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் கோ. தவசிமுத்து, ஆறுமுகம், அப்துல் காதர் ஆகிய மூவரும் ஆதரவாளரான பி சப்பாணிமுத்து, வேலாயுதக் கோனுர் ஆகியோரும் வெற்றி பெற்றனர்.

### திருச்செங்கோடு

திருச்செங்கோடு பஞ்சாயத்து தேர்தலில் 2-வது வார்டில் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் கே. சண்முகம் வெற்றிபெற்ருர். இவர் சேலம் சிறையில் உயிர் நீத்த வீரர் காவேரியின் மகன் என்பது குறிப்பிடத்தக்கது.

### மேலூர்

மேலூர் பஞ்சாயத்துத் தேர்தலில் 3-வது வார்டில் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் ச. அ. நாகராஜன் வெற்றிபெற்ருர்.

### மதுரை மாடக்குளம்

மதுரை தாலூகா மாடக்குளம் பஞ்சாயத்துத் தேர்தலில் கட்சி உறுப்பினர்கள் கே. எஸ். குமார், கே. பழனி, கே. ஓ. அழகர்சாமி, விவசாய சங்க உறுப்பினர் சொக்கு ஆகியோர் வெற்றிபெற்றனர்.

### கீழமாத்தூர்

கீழமாத்தூர் பஞ்சாயத்துத் தேர்தலில் விவசாய சங்கத்தைச் சேர்ந்த இருவரும் கட்சி உறுப்பினர் ஒருவரும் வெற்றிபெற்தனர்.

### சாத்தமங்கலம்

சாத்தமங்கலம் பஞ்சாயத்துத் தேர்தலில் கட்சி உறுப்பினர் ஒருவர் மட்டும் பல சூழ்ச்சிகளை முறியடித்து வெற்றிபெற்றிருக்கிருர்.

# நாகர்கோவில் செய்திகள்

### கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம்

வடசேரி கிருஷ்ணன் கோவில் கிளைகள் சார்பாக கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம் 10-10-58 அன்று சி. சங்கர் தலைமையில் நடைபெற்றது.

தி. மு. க. மாவலக் குழு உறுப்பினராயிருந்த தூத்துக்குடி எஸ். நடராஜன் தி. மு. க.வின் கொள்கையில்லாமையை விளக்கிப் பேசினுர்.

நெய்யாற்றங்கரை ஆர். ஜனுர்த்தனன் நாயர் எம்.எல்.ஏ. பேசுகையில், கேரள அரசாங்கத்தின் சாதனைகளையும் எதிர்க் கட்சிகளின் முறையற்ற எதிர்ப்பு நடவடிக்கைகளையும் பற்றி விளக்கினுர்.

### கன்னியாகுமரி ஜில்லா தோட்டத் தொழிலாளர் சங்கம்

நாகர்கோவில் நகரசபைத் திடலில் ஆர். கே. ராம் தலைமையில் கன்னியாகுமரி ஜில்லா தோட்டத் தொழிலாளர் சங்கப் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

மாலையில் தோட்டத் தொழிலாளர்கள் ஊர்வலமாக வந்து தங்கள் கோரிக்கைகளை ஜில்லா கலெக்டரிடம் சமர்ப்பித்தனர்.

தூத்துக்குடி எஸ். நடராஜன் தம் பகுதியில் தொழிற்சங்க இயக்கங்களைப்பற்றி விளக்கினுர்.

### குமரி ஜில்லா சலவைத் தொழிலாளர் சங்கம்

குமரி ஜில்லா சலவைத் தொழிலாளர் சங்கக் கூட்டம் 12-10-58ல் நடைபெற்றது. ஆபிரகாம், மாடசாமி, அந்தோணிமுத்து, அர்ச்சுனன், யசோதரன், சிவசங்கரவேலு, சிவஞானம், கந்தசாமி, பலவேசம் ஆகியோர் செயற்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### மடத்துவாசல் பொதுக்கூட்டம்

வடசேரி மடத்து வாசல் தெருவில் கம்யூனிஸ்ட் அனுதாபிகளின் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஸி. சங்கர் தலைமை வகித்தார்.

தூத்துக்குடி எஸ். நடராஜன் தி. மு. க. வின் பழைய நாள் வரலாற்றை விளக்கிக் கூறினுர்.

# அணு ஆயுதச் சோதனைகளை உடனே தடைசெய்க

## மனிதகுலமே இதை எதிர்பார்க்கிறது

### ஐ. நா. வில் இந்தோனேஷியப் பிரதிநிதி வலியுறுத்தல்

ஐ. நா. சபை, அக். 21—

ஐ. நா. வில் இந்தோனேசிய நிரந்தரப் பிரதிநிதியான அலி சாஸ்த்ரோமித்ஜோஜோ, பொதுச் சபையின் அரசியல் கமிட்டியில் பேசுகையில், அணு ஆயுதச் சோதனைகளைத் தடைசெய்ய வேண்டுமென மனித குலமே வற்புறுத்துவதாகவும் ஆனல் அந்த நம்பிக்கையை இழக்கச் செய்வது மிகவும் கொடூரமானதாகும் எனவும் கூறினர்.

நடைபெறவிருக்கும் ஜெனிவா பேச்சுவார்த்தைகளின் போது அணு, நீர்வாயு சம்பந்தமான எல்லா ஆயுதச் சோதனைகளும் தடை செய்யப்படுவது பற்றிய ஒப்பந்தத்திற்கு வருதல் மிக அவசியமானது என்றும் அவர் கூறியிருக்கிறர்.

அணு ஆயுதச் சோதனைகளைத் தடைசெய்யும் விஷயத்தில் 'மியூசிகல் சேர்' விளையாட்டில் ஈடுபடுவது ஒருவகை மூடத்தனமானது என்று அவர் மேலும் கூறியிருக்கிறர். இந்தச் சோதனைகளின் விளைவாக ஏற்படும் அபாயங்கள் மிகத் தெளிவானவை. இவற்றிற்கு மனிதகுலம் பலியாக வேண்டுமென யாரும் இனிமேலும் எதிர்பார்க்க முடியாது. இந்தக் கருத்துடன்தான் ஆப்கானிஸ்தான், பர்மா, கம்போடியா, இலங்கை, கனு, இந்தியா, ஈராக், மொராக்கோ, நேபாளம், ஐக்கிய அரபுக் குடியரசு, யேமன் முதலிய நாடுகளுடன் எங்கள் நாடும் சேர்ந்து அணு ஆயுதச் சோதனைகளைத் தடை செய்யும் முயற்சியில் இறங்கியிருக்கிறது.

"இந்த நகல் தீர்மானம் [illegible] முதலில், உடனடியான அணு ஆயுதச் சோதனை நிறுத்தத்தை [illegible] ஒப்பந்தத்துக்கான சூழ்நிலையை உருவாக்க முயற்சிக்கிறது. இரண்டாவதாக, இத்தகைய சோதனை நிறுத்தங்களின் அவசர அவசியத்தை வற்புறுத்துகிறது. மூன்றாவதாக, இதில் சம்பந்தப்பட்ட நாடுகள் தாம் மேற்கொண்ட பேச்சுவார்த்தைகளின் முடிவுகளை ஐ. நா. பொதுச் சபைக்கு அறிவிக்க வேண்டுமென விரும்புகிறது. அப்போதுதான் பொதுச் சபை மேல் நடவடிக்கைகளை மேற்கொள்ளமுடியும். நான்காவதாக இத்தகைய அணு, நீர்வாயு ஆயுதச் சோதனைகள் நிறுத்தப்படுவது உலக ரீதியில் செய்யப்பட வேண்டுமெனத் தெளிவுபடுத்துகிறது."

இந்த நகல் தீர்மானம், ஒப்பந்தம் இவ்வாறுதான் இருக்க வேண்டுமெனக் கூறவில்லை என்றும், ஆனலும் ஜெனிவா பேச்சுவார்த்தைகளின் விளைவாக ஏற்படும் ஒப்பந்தம் ஐ. நா. சபையின் தார்மீக செல்வாக்கினை உள்ளடக்கியிருக்க வேண்டுமெனத் தமது நாடு விரும்புவதாகவும் இந்த விஷயத்தில் முதல் முயற்சி மேற்கொள்ளப்பட்டு விட்டது என்றே கருதப்பட வேண்டுமெனவும் அண்மையில் கூடிய நிபுணர் மாநாடு மனித குலத்தை எதிர்நோக்கியிருந்த மிக அவசரப் பிரச்னை யொன்றினைத் தீர்க்க ஒரு வழிகாட்டியிருக்கிறது, எனவே நம்புதல் வேண்டுமெனவும் அவர் மேலும் கூறியிருக்கிறர்.

# அணுகுண்டு பகிஷ்காரம் பேச்சுவார்த்தை

## அமெரிக்காவின் அடம்

நியூயார்க், அக். 20—

அக்டோபர் 31-ந் தேதியிலிருந்து அணுகுண்டுகளைத் தடை செய்வதுபற்றி சோவியத் யூனியனுடன் பேச்சுவார்த்தை நடத்த தயார்என்று முன்னர் அமெரிக்கா அறிவித்ததல்லவா? உண்மையில் இந்தப் பேச்சுவார்த்தை வெற்றியடைய வேண்டுமானல் வெளி நாட்டு அமைச்சர்கள் மட்டத்தில் பேச்சுவார்த்தை நடத்தவேண்டுமென்று சோவியத் யூனியன் கூறியது. இதற்கு அமெரிக்கா மறுத்துவிட்டது. ஸ்தானிகர்கள் மட்டத்தில் பேச்சுவார்த்தை நடத்தலாம் என்றும் இது சுமூகமாக நடக்குமானல் மந்திரிகள் சந்திக்கலாம் என்றும் அமெரிக்காவும் பிரிட்டனும் கூறுகின்றன.

### அணு விஷமற்ற குண்டு அசல் பித்தலாட்டம்

பேராசிரியர் பெர்ட்ரண்ட் ரஸல் கண்டனம்

நியூயார்க், அக். 20—

யுத்த காலத்தில் அணு விஷமற்ற குண்டுகளை வீசலாம் எனக் கூறுவது அசல் பித்தலாட்டம் என்று முதுபெரும் விஞ்ஞானியும் நோபல் பரிசு பெற்ற தத்துவ அறிஞருமான பெர்ட்ரண்ட் ரஸல் கூறினர்.

அவரும், இந்திய விஞ்ஞானி ஹோமிபாபாவும் அளித்த டெலிவிஷன் பேட்டியில் மேற்கண்டவாறு அவர் கூறினர். இந்தப் பேட்டி கொலம்பியா ரேடியோவில் ஒலிபரப்பப்பட்டது. விஷமற்றது விஷமுள்ளது என எதுவுமில்லைஎன்று அவர்கூறினர்.

### பிரகாசம் நகர் திறப்பு விழா

ஹைதராபாத், அக். 22—

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி நடைபெறும் விசேஷப் பந்தல் அடங்கிய பிரகாசம்நகரை ஆந்திர முதலமைச்சர் சஞ்சீவ ரெட்டி திறந்து வைத்தார்.

# இரு மொழி பம்பாய்த் திணிப்பை மாற்றப் போவதில்லையாம்

## பிடிவாத கோபுரத்தில் தேபர்

ராஜ்கோட், அக். 22—

பார்லிமெண்டு முடிவு செய்த இரு மொழி பம்பாய் ராஜ்ய அமைப்பை மாற்றக் காங்கிரஸ் எவ்வித முயற்சியும் செய்யாது என்று காங்கிரஸ் அக்ராசனர் தேபர் இங்கு கூறினர்.

பத்திரிகை நிருபர்கள் கேட்ட கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கும் போது அவர் மேற்கண்டவாறு கூறினர். பார்லிமெண்ட் எடுத்த முடிவைத் தாம் தவறு என்று கருதவில்லை எனவும், எனவே அதை திருத்தவோ மாற்றவோ வேண்டிய பிரச்சினையே எழவில்லை எனவும் அவர் கூறினர்.

தேசியப் பிரச்சினைகளில் பல்வேறு அரசியல் கட்சிகளும் ஒன்று சேர்ந்து நின்று பரிகாரம் காணவேண்டும் என்று ஜெயப்பிரகாஷ் நாராயண் வெளியிட்ட கருத்தைப் பற்றி அவர் தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். பிரதமர் நேரு இதே போலத் தமது விருப்பத்தைத் தெரிவித்துள்ளார் என்றும், உணவுப் பிரச்சினைக்குப் பரிகாரம் காண இந்த முறை கையாளப்பட்டு வருகிறது எனவும் தேபர் கூறினர்.

சுதந்திரமான, ஒளிவுமறைவில்லாத விவாதம் ஜனநாயகத்தின் ஆத்மா எனவும் இந்த முறையைக் கூடியவரையில் ஊக்குவிக்க வேண்டும் என்றும் அவர் கூறினர். பி. டி. ஐ

### தியாகிகள் சின்ன அறப்போரில் 100 பேர் கைது

பம்பாய், அக். 22—

ஆமதாபாத் நகரில் தியாகிகள் சின்னத்தை நிறுவுவதற்காக ஆகஸ்ட் 12-ந்தேதி தொடங்கிய அறப்போரில் 1100 பேர் கைது செய்யப்பட்டனர், என்று பம்பாய் முதலமைச்சர் சாவன் இன்று சட்டசபையில் கூறினர். பரோடா, ஆமதாபாத் நகரங்களில் துப்பாக்கிப் பிரயோகத்தில் பலியான 4 பேர், காயமுற்ற 17 பேர் குடும்பங்களுக்கு நிவாரண மளிப்பது பற்றிக் கவனிக்கப்படும் என்றர்.

### 2 வருடக் கடுஞ்சிறை

கராச்சி, அக். 22—

நகர சபையிலிருந்து இலவசமாகத் தண்ணீரைப் பெற்று அதைக் காசுக்கு விற்ற ஒருவருக்கு பாக். ராணுவ நீதிமன்றம் இரண்டு வருடக் கடுங்காவல் சிறை தண்டனை விதித்துள்ளது.

# குமாய் காரணமாகப் போர் மூளாது

## கிருஷ்ணமேனன் கருத்து

லண்டன், அக். 22—

குமாய் தீவை மீட்க மக்கள் சீனு முனைந்திருப்பதால் அங்குள்ள நிலவரம் பற்றி நிருபர்கள் அபிப்பிராயம் கேட்டனர். குமாய் காரணமாக போர் மூளாது என்று இந்திய பாதுகாப்பு மந்திரி வி. கே. கிருஷ்ணமேனன் பதிலளித்தார்.

நியூயார்க்கிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பும் அவர் லண்டனில் இந்திய தளபதி திம்மையாவுடனும் இந்தியாவின் டிப்டி கமிஷனருடனும் ஆலோசனை நடத்தினர்.

### பூமியைச் சுற்றிவர பலூன்

அமெரிக்காவின் புது முயற்சி

நியூயார்க், அக். 22—

வானவெளியில் 375 முதல் 400 மைல் உயரத்தில் பூமியைச் சுற்றிவர 12 அடி பலூன் ஒன்றை அமெரிக்க ராணுவம் இன்று அனுப்புகிறது. அந்த பலூனின் எடை 10 ராத்தலுக்கும் குறைவாகும்.

ராக்கெட் மூலமாகவே பலூன் வானவெளிக்குள் அனுப்பப்படும்.

### இளவரசரை மணக்க சென்றவள் மரணம்!

விமான விபத்தில் 31 பேர் பலி

ரோம், அக். 22—

இத்தாலியில் கெட்டுனோவில் முறிந்த விமானத்திலிருந்த 26 பிரயாணிகளும் 5 விமானிகளும் மாண்டனர். 31 சவங்களும் அகப்பட்டன.

மாண்டவரில் பங்கிங்காம் என்ற பிரிட்டிஷ் யுவதி ஒருத்தி ஒரு இந்திய இளவரசரை மணந்துகொள்ள நேபிள்ஸ் நகருக்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தாள்!

# டல்லஸ்-சியாங் பிளவு

## இல்லையென சப்பைக் கட்டுகிறர் அமெரிக்க உதவி மந்திரி

தைபே, அக். 23—

அமெரிக்க அயல்நாட்டு மந்திரி டல்லஸுக்கும் சியாங்கே ஷேக்குக்கும் பிளவு ஏற்பட்டுவிட்டதாக வதந்திகள் கூறுகின்றன. அந்த வதந்திகள் 'முற்றிலும் பொய்' என்று அமெரிக்க உதவி அயல்நாட்டு மந்திரி ராபர்ட்சன் மறுப்பு விடுத்திருக்கிறர். டல்லஸுக்கும் சியாங்கிற்கும் 'பூரண உடன்பாடு' ஏற்பட்டுவிட்டதாகவும் ராபர்ட்சன் கூறுகிறர்.

### கோமிண்டாங் தலைவர்கள் கோரிக்கை

குமாய் தீவுக்கு சப்ளைகளைக் கொண்டு போகும் கப்பல்களுக்கு அமெரிக்க போர்க் கப்பல்கள் துணை வரவேண்டுமென்று கோமிண்டாங்தலைவர்கள் டல்லஸைக் கேட்டுக்கொண்டார்கள்.

அவசியம் என்று அமெரிக்க ராணுவ அதிகாரிகள் கருதும் போது துணைக்கு போர்க் கப்பல்கள் அனுப்பப்படுமென்றர் ராபர்ட்சன்.

குமாய், மட்சு தீவுகளிலிருந்து சீனவைத் தாக்கும் நோக்கமே இல்லை என்றர். சீனமீது படையெடுக்க சியாங்கிற்கு உத்தேசமே இல்லை என்றும் அவ்விதம் படையெடுப்பு நடந்தால் மூன்றுவது உலகப் போர் மூளுவதாக முடியுமென்பது அவருக்குத் தெரியுமென்றும் அமெரிக்க உதவி மந்திரி கூறினர்.

### அடிபட்டுக்கொண்டே இருப்பதா?

பார்மோசா சர்க்காரின் கொள்கையை பிரதிபலிக்கும் 'சீனு நியூஸ்' என்ற பத்திரிகை 'கோமிண்டாங் கோஷ்டியினர் [illegible] கம்யூனிஸ்டுகளிடமிருந்து அடிபட்டுக்கொண்டே இருக்க முடியாதென்று கூறுகிறது.

டல்லஸ்-சியாங் பேச்சு பற்றி கோமிண்டாங் வட்டாரத்திலிருந்து எவ்வித அபிப்ராயமும் வெளிவரவில்லை.

### சர்வாதிகாரிகளின் ஜம்பம்!

கராச்சி, அக். 10—

பாகிஸ்தானில் சமாதானமான ஒரு புரட்சி நடந்துள்ளதாகவும், இதுவரையில் தொழிலாளர்கள் கோஷங்களால் ஏமாற்றப்பட்டார்களென்றும், தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே பகைமையை வளர்த்தார்களென்றும் இனிமேல்தான் நல்ல உறவை வளர்க்கப்போவதாகவும் பாகிஸ்தான் சர்வாதிகாரி மிர்சா இன்று இங்கு ஒரு தொழிலாளர் கூட்டத்தில் பேசுகையில் கூறினர்.

இந்தக் கூட்டத்திற்காக தொழிலாளர்களுக்குப் பாதி நாள் லீவும் விடப்பட்டது. பலத்த போலீஸ் பாதுகாப்பில் கூட்டம் நடந்தது. என். எம். கான் என்ற சர்க்கார் அதிகாரி மில் முதலாளிகள் ரூ. 52 லிருந்து ரூ. 60 வரை தொழிலாளிகளுக்குச் சம்பளம் உயர்த்தித் தருவதாக வாக்களித்திருப்பதாகச் சொன்னர்.

# தோட்ட முதலாளிக்கு சில போலீஸ் அதிகாரிகள் சாதகம்

## கம்யூனிஸ்ட் கட்சி குற்றச்சாட்டு

திருவனந்தபுரம், அக். 22—

கேரளத்தில் ஹை ரேஞ்ச் தோட்டக்காரர்களிடம் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகம் பற்றி ஆழ்ந்த கவலை தெரிவித்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் கேரள ராஜ்ய கமிட்டியின் செயற்குழு ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

எந்த ஜனநாயக சர்க்காரும் அதிலும் குறிப்பாக கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சி செலுத்தும் சர்க்காரில் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெறவே கூடாது என்று செயற்குழு தனது தீர்மானத்தில் குறிப்பிட்டுள்ளது.

துப்பாக்கிப் பிரயோகத்துக்குப் பலியான தியாகிகளின் குடும்பங்களுக்கும், காயம்பட்டோர்களுக்கும் செயற்குழு தனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டது.

### சில போலீஸ் அதிகாரிகளின் செயல்

நேற்று இரவு செயற்குழு விடுத்துள்ள ஒரு அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது :—

"உழைக்கும் மக்களின் நியாயப்பூர்வமானப் போராட்டத்தை நசுக்கப் போலீஸ் பயன்படக் கூடாது என்பது கேரள சர்க்காரின் பிரகடனப்படுத்தப்பட்ட கொள்கை. அப்படியிருந்த தேவிகுளம் பகுதியில் சட்டம் அமைதியைக் காப்பதற்கென்றிருந்த சில போலீஸ் அதிகாரிகள் கேரள சர்க்காரின் கொள்கைக்கு விரோதமாகவும் தோட்ட முதலாளிகளுக்கு சதகமாகவும் தொழிலாளர்களை இம்சித்து வேலைநிறுத்தத்தை உடைப்பதில் அதிக அக்கறை காட்டியிருப்பதாகத் தோன்றுகிறது.

ஸ்தல கட்சியிலிருந்தும் தலைவர்களிடமிருந்தும், தொழிற்சங்க வட்டாரங்களிலிருந்தும் நடந்துள்ள செய்திகளின்படி துப்பாக்கிப் பிரயோகம் அவசியமற்று நடந்திருப்பதாகத் தெரிகிறது.

இந்தத் துப்பாக்கிப்பிரயோகம் பற்றி பகிரங்க விசாரணை நடத்தவும், மரணமடைந்தவர்கள் குடும்பங்களுக்கும் காயமடைந்தவர்களுக்கும் நஷ்டஈடு கொடுக்கவும், சர்க்காரின் கொள்கைக்கு விரோதமாக நடந்து கொண்ட அதிகாரிகள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கவும், இனிமேல் இத்தகைய சம்பவங்கள் நடைபெருதபடி பார்த்துக் கொள்ளவும் சர்க்கார் வாக்குறுதி அளித்துள்ளனர்.

ஆயிரக் கணக்கான தோட்டத் தொழிலாளர்கள் தங்களது நீண்ட நெடுங்கால நியாயக் கோரிக்கைக்காக அமைதியான வீரஞ் செறிந்த போராட்டத்தை நடத்தி வருகிறார்கள். தற்போது நடைபெற்ற சம்பவங்கள் எல்லாம் தோட்ட முதலாளிகள் செய்த அரசியல் சதியேயாகும். இவ்விதம் செயற்குழு தனது அறிக்கையில் கூறியுள்ளது.

### தோட்ட முதலாளிகள் நேருவிடம் தூது

கோட்டயம், அக். 22—

கேரளத்தில் தோட்டத் தொழில் நிலைமை பற்றி நேரில் விளக்க தென்னிந்திய தோட்ட முதலாளிகள் சங்கத்தின் தலைவர் [illegible], கேரள தோட்ட முதலாளிகள் சார்பில் [illegible] நேருஜியிடம் தூது செல்வார். ஹைதராபாத்தில் அ. இ. கா. க. நடக்குமிடத்தில் அவரை சந்தித்துப் பேசுவார் என்று தெரிகிறது.

### முடிய மில்லை சர்க்கார் எடுத்து நடத்துகிறது

பம்பாய், அக். 21—

முதலாளிகளால் மூடப்பட்ட ஸாக்ஸரியா மில்லை பம்பாய் சர்க்கார் எடுத்து நடத்த முடிவு செய்து இதன் திறப்பு விழா இன்று நடைபெற்றது. முதலமைச்சர் சாவன் விழாவை நடத்தினார். வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு நிவாரணம் தேடும் திட்டப்படி முதலில் ஷோலாப்பூர் மில் எடுத்து நடத்தப்பட்டது. ஸாக்ஸரியா மில் இரண்டாவதாகும். எதிர்க்கட்சி தலைவர்கள் எஸ். எம். ஜோஷி [illegible] முதலியோருடன் நடத்திய விவாதத்தை ஒட்டியே இத் திட்டம் உருவானதாக முதலமைச்சர் கூறினர். இந்த மில் மூடப்பட்டதால் 5,000 தொழிலாளர் பாதிக்கப் பட்டனர்.

சட்டப்படி இதை எடுத்து நடத்தக் காலதாமத மேற்பட்டதற்காக முதலமைச்சர் தொழிலாளர்களிடம் மன்னிப்புக் கோரினர்.

### கராமி இந்தியதூதர் சந்திப்பு

கெய்ரோ, அக். 22—

ஐக்கிய அரபுக் குடியரசில் இந்திய தூதராக இருக்கும் ஆர். கே. நேரு லெபனுன் சென்று ஜனதிபதியையும் பிரதமர் கராமியையும் சந்தித்துப் பேசினர். லெபனுனுக்கும் இந்தியாவின் சார்பில் அவரே தூதராகப் பணியாற்றுவார்.

# போனஸ் பிரச்னை உடனடி சலுகை

## தோட்ட முதலாளிகளிடம் மந்திரி டி. வி. தாமஸ் வற்புறுத்தல்

கோட்டயம், அக். 22—

இன்று தொழில் மந்திரி டி. வி. தாமஸை கேரள தோட்ட முதலாளிகள் சங்கத் தலைவர் சி. எச். எஸ். லண்டன், கண்ணன்தேவன் கம்பெனி ஜெனரல் மானேஜர் முதலியவர்கள் சந்தித்தனர்.

போனஸ் பிரச்சினையில் உடனடியாக முதலாளிகள் சலுகை அனுமதித்தாலொழிய வேலை நிறுத்தத்தை கைவிட தொழிற் சங்கம் இணங்காதென்று மந்திரி முதலாளிகளுக்குக் கூறினரென்று தெரிகிறது.

வேலை நிறுத்தம் கைவிடப்பட்டால் எல்லாக் கோரிக்கைகளைப் பற்றியும் பேச்சு நடத்த சித்தமாக இருப்பதாக தோட்ட முதலாளிகள் மந்திரியிடம் தெரிவித்தனராம்.

### பிரிட்டிஷ் உதவி ஹை-கமிஷனர் இ.எம்.எஸ். சந்திப்பு

திருவனந்தபுரம், அக். 21—

சென்னையிலுள்ள பிரிட்டிஷ் துணை ஹை-கமிஷனர் கே. ஆர். க்ரூக், கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட், தொழிலாளர் துறை அமைச்சர் டி. வி. தாமஸ் ஆகியோரைச் சந்தித்து பிரிட்டிஷ்காரருக்குச் சொந்தமான தோட்டங்களில் வேலை நிறுத்த நிலைமைகளைப் பற்றி விவாதித்தார் என்று தெரிகிறது.

தொழிலாளரின் கோரிக்கை பற்றியும் அவர் விவாதித்தார் என்று தெரிகிறது. பின்னர் அவர் மூணுறு புறப்பட்டுச் சென்றர். அக். 23-ல் அவர் மீண்டும் திருவனந்தபுரம் வரக்கூடும்.

### மேற்கு வங்கத்தில் கொள்ளைலாபத்தடை அவசரச் சட்டம்

கல்கத்தா, அக். 22—

அரிசி, நெல், கோதுமை வகையரு, பருப்பு வகைகள், எண்ணெய், சர்க்கரை, குழந்தை உணவு வகைகள், காகிதம், மருந்துகள், மசாலாப்பொருள்கள் இவை சம்பந்தமாக கொள்ளை லாபத்தைத் தடைசெய்து மேற்கு வங்க சர்க்கார் இன்று ஓர் அவசர சட்டத்தைப் பிறப்பித்திருக்கிறது. மேற்கு வங்கம் பூராவும் இந்த அவசரச் சட்டம் உடனடியாக அமலுக்கு வந்துவிட்டது.

# சேவை திறம்பட, பிரச்சினைகள் தீர ஜனநாயகமயமாக்கலே சிறந்த வழி

## தந்தி-தபால் ஊழியர் தலைவர் அறைகூவல்

கள்ளிக்கோட்டை, அக். 22—

தந்தி-தபால் இலாகாவில் சேவைகள் திறம்பட நடக்க வேண்டுமானல், தொழிலாளர்களின் அன்றடப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டுமானல் இலாகாவை ஜனநாயக மயமாக்குவதே சிறந்த வழி என்று இங்கு நடைபெற்ற அகில இந்திய டெலிகிராப் எஞ்சினியரிங் ஊழியர் மாநாட்டில் பேசிய தந்தி-தபால் ஊழியர் தலைவர் ஏ. பிரமநாதன் கூறினர்.

லைன் ஸ்டாப்களைப் பற்றிக் குறிப்பிட்ட அவர் இந்தியாவில் பிரயாணப் படி வாங்காத ஊழியர் பகுதி அவர்கள் மட்டுமே என்றர். அவர்கள் கோரிக்கை மறுக்கப்பட்டதைக் கண்டித்தார்.

தொழிற் சங்க வேலைகளில் ஈடுபட்டதற்காகப் பல ஊழியர்கள் தண்டிக்கப்பட்டுள்ளனர் என்பதைச் சுட்டிக் காட்டிய அவர் சேவா விதிகள் மாற்றப்பட்டு சாமான்யத் தொழிற்சங்க வேலைகளில் ஈடுபடும் உரிமை அளிக்கப்பட வேண்டும் என்றும் வலியுறுத்தினர்.

பல்வேறு சிக்கல்களுக்கிடையே பொது மக்களுக்கு சேவை புரிந்துவரும் தந்தி-தபால் ஊழியர்கள் நிலை உயரப் பொது மக்கள் துணை நிற்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

வேதபுரி தலைமையுரை நிகழ்த்தினர். மக்கள் சேவையே தமது லட்சியம் என்பதை எடுத்துக் கூறினர்.

மாநாட்டை கே. ஏ. தாமோதரமேனன் துவக்கி வைத்தார். ஏ. கே. கோபாலன் எம். பி. மாநாட்டில் பேசினர். பி. டி. ஐ.

### நாணயமற்ற அரசாங்கமிருப்பின் புரட்சி நிச்சயம்

நீதி மன்றத்தில் எல்லை காந்தி வாக்குமூலம்

லாகூர், அக். 22—

முன்னுள் செஞ்சட்டை இயக்கத் தலைவரான கான் அப்துல் கபார்கான் இன்று பாகிஸ்தான் உயர்நீதி மன்றத்தில் 1956-ல் தனக்கு விதிக்கப்பட்டுள்ள தண்டனையை எதிர்த்துச் செய்துள்ள அப்பீலின் மீது தனது வாக்குமூலத்தைச் சமர்ப்பித்தார்.

1956-ல் தன்னுடைய பேச்சுக்களில் எச்சரித்திருந்ததற்கு மாருக பாகிஸ்தான், ஏற்கனவே ஒரு புரட்சியைக் கண்டிருக்கிறது என்று அவர் கூறினர்.

"நாணயமும் நேர்மையும் அற்ற அரசாங்கமும் பார்லிமெண்டும் அரசியல் கட்சிகளும் செயல்படுமையில் எந்த உருவத்திலாவது புரட்சி தோன்றுவது நிச்சயம்" என்று அவர் மேலும் கூறினர்.

### தசரா ஊர்வலத்தை பகிஷ்கரித்த 12 பேர் கைது

மைசூர், அக். 22—

தசரா ஊர்வலம் நிலப் பிரபுத்துவ வழக்கத்தை அடிப்படையாகக் கொண்டது என்று பகிஷ்காரம் செய்து கறுப்புக் கொடி காட்டத் திட்டமிட்டதாகச் சந்தேகித்து கோபால் கௌடா எம். எல். ஏ. உட்பட 12 சோஷலிஸ்ட்களை போலீசார் கைது செய்துள்ளனர்.

# நடக்க இருப்பவை

### பொது அறிவுக் கழகம் விவாத அரங்கு

வத்தலக்குண்டு இக்பால் [illegible] பாடசாலையில் பொது அறிவுக்கழக துவக்கவிழா 25-10-58 சனி மாலை 2-30 மணிக்கு திரு. ஏ. [illegible] எம். ஏ. தலைமையில் நடைபெறும்.

சர்வோதய தத்துவம் பற்றி திண்டுக்கல் முன்னாள் சேர்மன் திரு. க. கணேசன் பி. ஏ., பி. எல். பேசுவார். கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் மதுரை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி ஏ. பாலசுப்ரமணியம் பி. எஸ்.ஸி., பி.எல். பேசுவார். மாலையில் ராஜாஜி மைதானத்தில் பொதுக்கூட்டம்.

# வானொலி

## சென்னை 1

25—10—58

காலை முதல் ஒலிபரப்பு

7-00 துதிப் பாடல்கள்; 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் - வானிலை அறிவிப்பு; 7-15 தமிழில்செய்தி; 7-30 கும்பகோணம் பி. சக்கரபாணி பாட்டு, 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

1-00 கீதமாலிகா; 1-30 கீத மஞ்சரி; 1-40 ஹிந்தியில் செய்தி; 1-50 கீதமாலிகா; 2-00 தமிழில் செய்தி; 2-10 பி. விஸ்வநாத ராவ் புல்லாங்குழல்; 3-00 ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

5-30 ஆர். கல்பகம் பாட்டு; 6-05 பிராந்தியச் செய்திகள்; 6-15 கிராம நிகழ்ச்சிகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 பாமினி நாடகம்; 8-30 எஸ். ராஜம் பாட்டு, டி. ஆர். பாப்பா வயலின், கல்பாத்தி ஏ. ராமநாதன் மிருதங்கம்; 9-30 ஐரோப்பிய சங்கீதம்; 10-30 வானிலை அறிவிப்பு; ஒலிபரப்பு முடிவு.

## திருச்சி

25—10—58

காலை முதல் ஒலிபரப்பு

7-00 இசைக்கதிர்; 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 கே. வி. சாந்தா ரத்னம் வயலின்; 8-00 ஆங்கிலத்தில் செய்தி; 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

1-00 கே. வி. சாந்தா ரத்னம் வயலின்; 1-40 ஹிந்தியில் செய்தி; 1-50 சாத்தூர் ஏ. ஜி. சுப்ரமணியம்; 2-00 தமிழில் செய்தி; 2-10 ஒலிப்பதிவுகள்; 2-45 வானிலை அறிவிப்பு, ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

5-45 இசைப் பயிற்சி; 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள்; 6-15 கிராம நிகழ்ச்சிகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 பாமினி நாடகம்; 8-30 Radio News Reel; 8-40 கான மஞ்சரி; 9-00 ஆங்கிலத்தில் செய்தி; 9-15 Our Way of Life Peace the only Way Talk by S. Y. Krishnaswami; 9-30 அகில பாரத சங்கீத நிகழ்ச்சி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாட்டு; 11-00 ஒலிபரப்பு முடிவு.

# மார்க்கெட் நிலவரம்

சென்னை, அக். 23—

| | |
|---|---|
| சவரன் | ரூ 73- 8-0 |
| தங்கம் (ரெடி) | ரூ. 111-14-0 |
| மூசை தங்கம் | ரூ 110- 8-0 |
| வெள்ளி100தோ. எடை | 192-0-0 |
| வெள்ளி 1 ரூ. எடை | 1-15-6 |

**மணிலா பயறு**

| | |
|---|---|
| 531 ராத்தல் கொண்ட பாரம் (விற்பனைவரி உட்பட) கோடை சரக்கு | ரூ 194.00 |
| புது சரக்கு | ரூ. 188 மு 188 |

**மணிலா எண்ணெய்**

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி 3%FFA (மொத்த விலை)

| | |
|---|---|
| ரெடி | 363 00 |
| அக்டோபர் | 362-00 |
| நவம்பர் | 335-00 |
| டிசம்பர் | 316-00 |

**விளக்கெண்ணெய்**

(500 ரா. பாரம் 1-க்கு) மதராஸ் கிடங்கு டெலிவரி

| | |
|---|---|
| திருப்பத்தூர் | 330-00 |
| சேலம் "தாமரை அன்னம்" | 27-00 |

**தேங்காய் எண்ணெய்**

(37½ ரா. டின் 1க்கு)

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 40-50 |
| அம்பு மார்க் | 39-25 |
| ராஜா | 39-75 |

**சர்க்கரை**

2 அந்தர் மூட்டை 1க்கு நெட்

| | |
|---|---|
| வில்லைகள்—உய்யூரு | 106-00 |
| சாமல்கோட்டை | 106 25 |



# தாய்லந்து தேசிய சட்ட சபை கலைக்கப்பட்டது

## அரசியல் சட்டம் ரத்து

### 35 கம்யூனிஸ்ட் ஆதரவாளர் கைது

பாங்காக், அக். 21—

தாய்லந்தில் ஆட்சி அதிகாரத்தைப் பறித்துக் கொண்ட தளபதி சாரிட்அனுரட் ராணுவக் கும்பல் தேசிய சட்ட சபையைக் கலைத்து அரசியல் சட்டத்தையும் ரத்தாக்கி விட்டது.

சட்ட சபையில் உள்ள இடது சாரித் தலைவர் உட்பட கம்யூனிஸ்ட் ஆதரவாளர் என்று கருதப்படும் 35 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

நாட்டின் நிர்வாகத்தில் கம்யூனிஸ்ட் ஏஜெண்டுகள் தலையிடுவதாகப் பழி போட்டே இந்த ராணுவக் கும்பல் அதிகாரத்தைக் கைப்பற்றியுள்ளது.

தாய்லந்தில் கடந்த 26 வருடங்களில் 13 தடவை இத்தகைய ராணுவக் கலகங்கள் ஏற்பட்டு அதிகாரம் கைமாறியுள்ளது.

### 'பாக். நிகழ்ச்சிகளிலிருந்து படிப்பினை பெறுங்கள்'

சாதிக் இடித்துரை

ஸ்ரீநகர், அக். 21—

காஷ்மீர் ஜனநாயக தேசிய மகாநாட்டுத் தலைவர் ஜி. எம். சாதிக் காஷ்மீர் ஆட்சித் தலைவர்கள் பாகிஸ்தான் சம்பவங்களிலிருந்து படிப்பினை பெறட்டும் என்று இடித்துரைத்தார். 'ஜனநாயகம்' மக்கள் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் தவறியவுடன் மக்கள் அதில் நம்பிக்கை இழந்தார்கள். காஷ்மீர் ஆளும் கட்சியில் லஞ்சம், ஊழல், பதவிவேட்டை சுயநலம் தலைவிரித்தாடுகிறது, இது ஜனநாயகத்திற்கு உகந்ததல்ல என்று எச்சரித்தார்.

# கேரள பேங்கு முதலாளிகளின் போக்கு உதவிகரமல்ல

## பாங்கு ஊழியர் சங்க செயலாளர் யோசனை

கோட்டயம், அக். 22—

கேரளத்தில் பாங்குத் தொழில் நன்கு வளர்ச்சி அடைவதற்கு ஓரே உத்தரவாதம் இந்த ராஜ்யத்திலுள்ள சிறு பாங்கிகளை ஒன்றுக இணைத்துவிடுவதே என்று அகில இந்திய பாங்கு ஊழியர் சங்கப் பொதுச் செயலாளர் பிரபாத்கர் கூறுகிறர். அவர் ஓர் அறிக்கையில் மேலும் கூறுவதாவது :—இந்த ராஜ்யத்தில் பாங்குத் தொழிலானது நாட்டின் பொருளாதாரத்திற்கே அபாயம் விளைவிக்கும் முறையில் இயங்கிக் கொண்டிருக்கிறது. பல பாங்குகள் இருந்தும் ராஜ்யத்தின் பொருளாதாரம் அபிவிருத்தியடையவில்லை. பாங்குகள் தமக்கு உரியதல்லாத முயற்சிகளில் ஈடுபடுகின்றன. அவற்றிற்குரிய வசதிகள் கொஞ்சம். ஆகவே சிறு பாங்கிகளை இணைத்துவிட வேண்டும். அப்பொழுதே கேரளத்தில் பாங்குத் தொழில் வளர்ச்சியுறும்; ராஜ்யத்தின் கைத்தொழிலுக்கும் வர்த்தகத்திற்கும் அப்பாங்குகள் மூலம் நிதி வசதிகள் கிடைக்கும்.

பாங்குகளைத் தேசியமயமாக்கினல் மக்களுக்கு நன்மை ஏற்படுமென்றும் பிரபாத்கர் கருதுகிறர்.

பாங்கு ஊழியருக்கு குறைந்த பட்ச சம்பள நிர்ணயம் சம்பந்தமாக, பிரபாத்கர் சொன்னதாவது:—"சம்பள அடிப்படையை மாற்றும் பிரச்சினை பற்றி விசாரிக்க பாங்கி முதலாளிகள், ஊழியர் அடங்கிய கமிஷன் ஒன்றை அமைக்க ராஜ்ய சர்க்கார் நடவடிக்கை எடுத்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சிறு பாங்கிகளை இணைத்தால் தான் நன்மை; ஊழியருக்கு நல்ல ஊதியம் கொடுக்கவும் முடியும். பாங்க் ஊழியர் வேலை நிலைமைகளை அபிவிருத்தி செய்ய முக்கட்சி (பாங்கர், ஊழியர், சர்க்கார்) மகாநாடு நடத்தப்பட வேண்டும்."

### மலையாள அகராதி விரைவில் தயாராகும்

திருவனந்தபுரம், அக். 22—

விரிவான மலையாள மொழி (லெக்ஸிகன்) அகராதி நிர்ணயிக்கப்பட்டுள்ள மூன்றண்டுகளுக்குள் வெளிவரும் என்று கேரளப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஜான் மத்தாய் அறிவித்தார். 15 லட்ச ரூபாய் செலவில் தயாரிக்கப்படும் அது 6 அல்லது 7 பகுதிகளாக வெளிவரும்.

# எண்ணெய்த் தொழிற்சாலை கட்ட இந்திய-ருமேனிய உடன்பாடு

புதுடில்லி, அக் 22—

இந்தியாவில் ஒரு எண்ணெய்த் தொழிற்சாலை நிறுவுவது சம்பந்தமாக இந்திய சர்க்காருக்கும் ருமேனிய மக்கள் குடியரசு சர்க்காருக்குமிடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டு அக். 20-ந்தேதி புகாரெஸ்டில் ஓர் ஒப்பந்தம் கையெழுத்தாகியது.

இந்திய சர்க்கார் சார்பில் மத்திய சுரங்க எரிபொருள் இலாகா மந்திரி கே. டி. மாளவியா கையொப்பமிட்டார். ருமேனிய சர்க்கார் சார்பில் வர்த்தக மந்திரி மார்ஷல் பொபெங்கு கையொப்பமிட்டார்.

ருமேனியாவுக்குச் சென்றுள்ள மாளவியா இந்தத் தொழிற்சாலையில் பணியாற்றவிருக்கும் தொழில் நுட்ப நிபுணர்கள், விசேஷ நிபுணர்களைக் கண்டு பேசினர். எண்ணெய்த் தொழிற்சாலைகள், சுரங்கங்கள், தொழிற்சாலைகள் பலவற்றை நேரில் விஜயம் செய்து பார்வையிட்டார். இந்தத் தகவலை புதுடில்லியிலுள்ள ருமேனிய சர்க்கார் தூதராலயம் தெரிவித்தது.

### சைப்ரஸில் பிரிட்டிஷ் எதிர்ப்புக் கிளர்ச்சி

பிரிட்டிஷ் சிப்பாய் பலி

நிகோஸியா, அக். 21—

27 வருஷங்களுக்கு முன்னுல் சைப்ரஸ் தீவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்த்து நடைபெற்ற மிகப் பெரிய கலகத்தில் சர்க்கார் மாளிகையே தீ வைத்து எரிக்கப்பட்டது.

அந்த சம்பவத்தின் 27வது ஆண்டு நிறைவை சைப்ரஸ் மக்கள் இன்று அனுஷ்டித்தனர். இன்று ஒரு பிரிட்டிஷ் சோல்ஜர் கொல்லப்பட்டார். 4 பேருக்கு காயம்.

வடக்கு சைப்ரஸில் பல பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் ஹர்த்தால் செய்து, தேசீயப் பாடல்கள் பாடி, கோஷங்கள் கோஷித்து ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இதுவரை சில்லறைத் தாக்குதல்களில் 125 பிரிட்டிஷ் சோல்ஜர்கள் பலியாகியுள்ளனர்.

# வெள்ளை முதலாளி...

(1-ம்பக்கத் தொடர்ச்சி)

விட முடியாது என்றும் கோடிட்டுக் காட்டினர்.

### கடும் நடவடிக்கை எடுக்கவேண்டும்

"பாதுகாப்பு கிடையாது, பந்தோபஸ்து இல்லை என்று கண்ணன் தேவன் கம்பெனிக்காரர்கள் ஓலமிடுகிருர்கள். ஆனல் அதே சமயத்தில், தம்முடைய சுயநலத்தைக் காத்துக்கொள்ளும் பொருட்டு அவர்களே பாதுகாப்பற்ற நிலைமைகளை உண்டாக்குகிருர்கள். இப்படிப்பட்டவர்கள் மீது ராஜ்ய சர்க்கார் கடுமையான நடவடிக்கை எடுத்து புத்தி புகட்டவேண்டும்" என்று வற்புறுத்தியுள்ளார்.

"வீரதீரமான போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளி மக்களே! யாராலும் முறிக்கப்படமுடியாத உருக்கு உறுதியுடன் உங்கள் போராட்டத்தை நீடித்து நடத்துங்கள்" என்று அந்த அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

ஜனசக்தி பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிட்டவர்: எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர் ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே சென்னை-1.
Janasakthi, Tamil Daily,
32, Broadway, Madras-1.